E-BOOK

# الولاء والبراء

# அல்-வலா வல்-பரா

## பித்அத் ஓர் எச்சரிக்கை

Islam Kalvi Media Unit

ஆசிரியர்:

இமாம் சாலிஹ் அல் ஃபவ்ஜான் (ரஹ்)

தமிழில்:

முஹம்மது உவைஸ் இப்னு நாஸிருத்தீன்

# الولاء والبراء

# அல் வலா வல் பரா

மற்றும்

## பித்அத் ஓர் எச்சரிக்கை

ஆசிரியர்:

**இமாம் ஸாலிஹ் அல் ஃபவ்ஜான் (ரஹ்)**

தமிழில்:

**முஹம்மது உவைஸ் இப்னு நஸிருத்தீன்**

# அல் வலா வல் பரா

ஆசிரியர் : இமாம் ஸாலிஹ் ஃபவ்ஜான் (ரஹ்)
மொழி பெயர்ப்பு : முஹம்மது உவைஸ் இப்னு நஸிருத்தீன்
முதல் பதிப்பு :
பக்கம் :
புத்தக அளவு : 1/8 டெம்மி
டைப்செட் : மைண்ட் டெக் டிஸைன்ஸ்-கோவை.

# பொருளடக்கம்:


| | |
|---|---|
| இறைநிராகரிப்பாளர்களுடன் நேசம் கொள்வதும் அவர்களுக்கு உதவுதலும் | 09 |
| இறைநம்பிக்கையாளர்களுடன் நேசம் கொள்வதும், அவர்களுக்கு உதவுதலும் | 15 |
| வலா அல்பராவில் மூன்று வகையினர் | 22 |
| பித்அத் ஓர் எச்சரிக்கை | 26 |
| பித்அத் என்றால் என்ன? | 26 |
| பித்அத்தின் வகைகள் | 28 |
| அனைத்து பித்அத்களுக்கும் சட்டம் என்ன? | 29 |
| முஸ்லிம்களுடைய வாழ்க்கையில் பித்அத் வெளிப்படுதல் | 31 |
| பித்அத்கள் தலைதூக்கியதற்கான சில காரணிகள் | 32 |
| பித்அத்கள் பரவுவதற்கு அடிப்படையான காரணிகள் சில | 33 |
| பித்அத்வாதிகளின் வழிமுறைகள் மீது ‘அஹ்லுசுன்னா வல் ஜமாஅத்’ வுடைய நிலைப்பாடு | 36 |
| பித்அத் வாதிக்கு மறுப்பு,பதில் கொடுப்பதில் ‘அஹ்லு சுன்னா வல் ஜமாஅத்’வுடைய வழிமுறைகள் | 38 |
| பரக்கத் தேடுவது பற்றிய பாடம் | 42 |
| இன்றைய காலத்தில் உருவாக்கப்பட்ட பித்அத்களில் சில | 43 |
| பித்அத்வாதிகளிடம் நடந்து கொள்ளும் முறை | 44 |

بِسْمِ ٱللَّهِ ٱلرَّحْمَٰنِ ٱلرَّحِيمِ

## அல் வலா வல் பரா

*இஸ்லாம் என்பது அல்லாஹ் ஒருவனுக்கு மட்டுமே கீழ்ப்படிவதும்; மேலும், இணைவைப்பை விட்டும் இணைவைப்பாளர்களை விட்டும் விலகுவது.*

*அல்லாஹ் ரப்புல் ஆலமீன் கூறுகிறான்:*

*ஒவ்வொரு சமூகத்திலும் திட்டமாக நாம் ஒரு தூதரை அனுப்பியிருக்கிறோம். (அத்தூதர் அச்சமூகத்தார்களிடம்) அல்லாஹ்வையே வணங்குங்கள்; (அல்லாஹ் அல்லாத வணங்கப்படும் ஷைத்தான்களாகிய அனைத்து) தாகூத்திலிருந்தும் நீங்கள் விலகிக் கொள்ளுங்கள் என்று கூறினார்கள். (அல்குர்ஆன்)*

*இந்த கண்ணியமான வசனத்தில் அல்லாஹ் சுப்ஹானஹு தஆலா, அவனை மட்டுமே வணங்குங்கள் என்று சொல்லி விட்டு நிறுத்தாமல் அவனை வணங்குவதோடு இணைவைப்பை விட்டும், வரம்பு மீறுகின்ற செயல்களை விட்டும் விலகுமாறு கட்டளையிடுகின்றான்; ஏனென்றால், நம்முடைய தவ்ஹீத் முழுமை பெற வேண்டுமென்றால் கண்டிப்பாக இணைவைப்பை விட்டும், இணைவைப்பாளர்களை விட்டும் விலகியிருப்பது அவசியமாகும்.*

*இது கொள்கை விடயத்தில் ஒரு சுருக்கமான மடல். இதனை நன்முறையில் விளங்கிக் கொண்டு, நடைமுறைப்படுத்தி ஒவ்வொரு முஸ்லிமும் தன்னுடைய மார்க்கத்தை பாதுகாப்பது கடமையாகும். ஏனென்றால், இவ்விடயம் உங்களை உங்களின் தீனை விட்டும் வெளியேற்றும் வாய்ப்புள்ளது. அதனை நீங்கள் அறியாமல் இருக்கும் பொருட்டு, அது என்னவென்றால் அது தான் அன்பு, வெறுப்பு, பாசம், கோபம், குரோதம் ஆகும். அன்பு காட்டப்பட வேண்டியவர்களிடம் அன்பும், வெருப்பு காட்டப்பட வேண்டியவர்களிடம் வெறுப்பும் காட்டுவது. அதாவது ஓரிறை கொள்கையாளரிடம் அன்பும் பாசமும், இறைநிராகரிப்பாளர்களிடம் வெறுப்பும், குரோதமும் காட்ட வேண்டும்.*

*இது நபி இப்றாஹிம் (அலை) அவர்களுடைய மார்க்கம். நபி இப்றாஹிம் (அலை) அவர்களை ஈமான் கொண்டு அவர்களோடு இருந்த அந்த முஃமின்களின் வழிமுறை.*

قَدْ كَانَتْ لَكُمْ أُسْوَةٌ حَسَنَةٌ فِيٓ إِبْرَٰهِيمَ وَٱلَّذِينَ مَعَهُۥٓ إِذْ قَالُوا۟ لِقَوْمِهِمْ إِنَّا بُرَءَٰٓؤُا۟ مِنكُمْ وَمِمَّا تَعْبُدُونَ مِن دُونِ ٱللَّهِ كَفَرْنَا بِكُمْ
وَبَدَا بَيْنَنَا وَبَيْنَكُمُ ٱلْعَدَٰوَةُ وَٱلْبَغْضَآءُ أَبَدًا حَتَّىٰ تُؤْمِنُوا۟ بِٱللَّهِ وَحْدَهُۥٓ إِلَّا قَوْلَ إِبْرَٰهِيمَ لِأَبِيهِ لَأَسْتَغْفِرَنَّ لَكَ وَمَآ أَمْلِكُ لَكَ
مِنَ ٱللَّهِ مِن شَىْءٍ رَّبَّنَا عَلَيْكَ تَوَكَّلْنَا وَإِلَيْكَ أَنَبْنَا وَإِلَيْكَ ٱلْمَصِيرُ ﴿٤﴾

இப்றாஹிமிலும் அவருடன் இருந்தவர்களிலும் உங்களுக்கு ஓர் அழகிய முன்மாதிரி திட்டமாக இருக்கிறது. அவர்கள் தம் சமூகத்தாரிடம், 'நிச்சயமாக நாங்கள் உங்களிலிருந்தும், அல்லாஹ்வை அன்றி நீங்கள் வணங்கிக் கொண்டிருப்பவற்றிலிருந்தும் நீங்கி, உங்களை நாங்கள் நிராகரித்து விட்டோம்; இன்னும் அல்லாஹ் ஒருவனையே நீ ங்கள் விசுவாசம் கொள்ளும்வரை எங்களுக்கும் உங்களுக்குமிடையில் விரோதமும் வெறுப்பும் என்றென்றும் வெளிப்பட்டுவிட்டது' என்று கூறியபோது...(அல்மும்தஹினா:4)

மேலும், இது நம்முடைய முஹம்மது நபி (ஸல்) அவர்களுடைய மார்க்கமும் வழிமுறையும்.

يَٰٓأَيُّهَا ٱلَّذِينَ ءَامَنُواْ لَا تَتَّخِذُواْ ٱلْيَهُودَ وَٱلنَّصَٰرَىٰٓ أَوْلِيَآءَ ۘ بَعْضُهُمْ أَوْلِيَآءُ بَعْضٍ ۚ وَمَن يَتَوَلَّهُم مِّنكُمْ فَإِنَّهُۥ مِنْهُمْ ۗ إِنَّ ٱللَّهَ لَا يَهْدِى ٱلْقَوْمَ ٱلظَّٰلِمِينَ ﴿٥١﴾

ஓ விசுவாசங் கொண்டோர்களே! யூதர்களையும் கிருஸ்தவர்களையும் உங்களுக்கு நன்பனாக எடுத்துக் கொள்ளாதீர்கள்; (உங்களுக்கு விரோதம் செய்வதில்) அவர்களில் சிலர் சிலருக்கு பாதுகாவலராக இருக்கின்றனர். உங்களில் எவரேனும் தனக்கு பாதுகாவவலர்களாக்கிக் கொண்டால் அப்போது நிச்சயமாக அவரும் அவர்களில் உள்ளவர்தாம். நிச்சயமாக அல்லாஹ் இந்த அநியாயக்கார சமூகத்திற்கு நேர்வழி காட்டமாட்டான். (அல்மாயிதா : 51)

இந்த வசனம்,வேதம் கொடுக்கப்பட்டவர்களான யூதர்களையும் கிருஸ்தவர்களையும் குறிப்பாக பேசுகிறது. அவர்கள் மீது அன்பும் பாசமும் காட்டுவதையும், அவர்களை உற்ற தோழர்களாகவும் பாதுகாவளர்களாகவும் எடுத்துக் கொள்வதையும் தடை செய்கிறது.

மற்றுமொரு பொதுவான தடையைப் பாருங்கள்,

يَٰٓأَيُّهَا ٱلَّذِينَ ءَامَنُواْ لَا تَتَّخِذُواْ عَدُوِّى وَعَدُوَّكُمْ أَوْلِيَآءَ تُلْقُونَ إِلَيْهِم بِٱلْمَوَدَّةِ وَقَدْ كَفَرُواْ بِمَا جَآءَكُم مِّنَ ٱلْحَقِّ يُخْرِجُونَ ٱلرَّسُولَ وَإِيَّاكُمْ ۙ أَن
تُؤْمِنُواْ بِٱللَّهِ رَبِّكُمْ إِن كُنتُمْ خَرَجْتُمْ جِهَٰدًا فِى سَبِيلِى وَٱبْتِغَآءَ مَرْضَاتِى ۚ تُسِرُّونَ ... بِمَآ أَخْفَيْتُمْ وَمَآ أَعْلَنتُمْ ۚ وَمَن يَفْعَلْهُ مِنكُمْ فَقَدْ ضَلَّ سَوَآءَ ٱلسَّبِيلِ ﴿١﴾

விசுவாசம் கொண்டோரே! என்னுடைய விரோதியையும் உங்களுடைய விரோதியையும் அவன்பால் உங்கள் நேசத்தை சே ர்த்து வைக்கின்ற நன்பர்களாக எடுத்துக் கொள்ள வேண்டாம்; (ஏனென்றால்) சத்தியத்திலிருந்து வந்த வேதத்தை திட்டமாக அவர்கள் நிராகரித்து விட்டனர்; உங்கள் இரட்கனாகிய அல்லாஹ்வை நீங்கள் விசுவாசித்ததற்காக (நம்முடைய தூதரையும் உங்களையும்) உங்கள் இல்லங்களிலிருந்து வெளியேற்றுகிறார்கள்; (விசுவாகிகளே) நீங்கள் என் பாதையில் ஜிஹாத் செய்வதற்காகவும், என் பொருத்தத்தை தேடியும் நீங்கள் வெளியேறி விடுவீர்களாயின் (அவர்களை நன்பர்களாக எடுத்துக் கொள்ள வேண்டாம். ஆனால், நீங்களோ) அவர்களின்பால் நேசத்தின் காரணமாக (செய்திகளை) மறைமுகமாக சேர்த்து வைக்கிறீர்கள்; நீ ங்கள் (உங்கள் மனதில்) மறைத்து விட்டதையும் நானே நன்கறிவேன்.

*இன்னும் உங்களில் யார் இதைச் செய்கிறாரோ அவர் நேரான பாதையைத் திட்டமாக தவறிவிட்டார். (அல்மும்தஹினா:1)*

---------------------------------------------------------------

*அல்லாஹ், திட்டமாக காஃபிர்களோடு இணைவைப்பவர்களோடு உறவு கொண்டாடுவதை; அன்பு நேசம் காட்டுவதை தடை செய்து விட்டான்; அவர்கள் நெருங்கிய உறவினர்களாக இருந்தாலும் சரியே.*

*மேலும், அல்லாஹ் கூறுகிறான்:*

يَٰٓأَيُّهَا ٱلَّذِينَ ءَامَنُواْ لَا تَتَّخِذُوٓاْ ءَابَآءَكُمْ وَإِخْوَٰنَكُمْ أَوْلِيَآءَ إِنِ ٱسْتَحَبُّواْ ٱلْكُفْرَ عَلَى ٱلْإِيمَٰنِ ۚ
وَمَن يَتَوَلَّهُم مِّنكُمْ فَأُوْلَٰٓئِكَ هُمُ ٱلظَّٰلِمُونَ ﴿٢٣﴾

*விசுவாசங் கொண்டோரே! உங்களுடைய தந்தையர்களையும் உங்களுடைய சகோதர்களையும் விசுவாசத்தை விட நிராகரிப்பை அவர்கள் நேசித்தால் நீங்கள் அவர்களை (உங்கள்) பாதுகாவலர்களாக எடுத்துக் கொள்ள வேண்டாம்; எடுத்துக் கொண்டால் அவர்கள்தாம் அநியாயக்காரர்கள்.(அத்தவ்பா:23)*

*அல்லாஹ் கூறுகிறான்:*

وَلَوْ كَانُوٓاْ ءَابَآءَهُمْ أَوْ أَبْنَآءَهُمْ أَوْ إِخْوَٰنَهُمْ أَوْ عَشِيرَتَهُمْ أُوْلَٰٓئِكَ لَّا تَجِدُ قَوْمًا يُؤْمِنُونَ بِٱللَّهِ وَٱلْيَوْمِ ٱلْـَٔاخِرِ يُوَآدُّونَ ۚ
كَتَبَ فِى قُلُوبِهِمُ ٱلْإِيمَٰنَ وَأَيَّدَهُم بِرُوحٍ مِّنْهُ مَنْ حَآدَّ ٱللَّهَ وَرَسُولَهُۥ وَيُدْخِلُهُمْ جَنَّٰتٍ تَجْرِى مِن تَحْتِهَا خَٰلِدِينَ فِيهَا
رَضِىَ ٱللَّهُ عَنْهُمْ وَرَضُواْ عَنْهُ أُوْلَٰٓئِكَ حِزْبُ ٱللَّهِ ۚ أَلَآ إِنَّ حِزْبَ ٱللَّهِ هُمُ ٱلْمُفْلِحُونَ ﴿٢٢﴾

*அல்லாஹ்வையும் இறுதிநாளையும் விசுவாசங்கொண்ட சமூகத்தினரை; அல்லாஹ்வையும் அவனது தூதரையும் பகைத்துக் கொண்டிருக்கிறார்களோ அவர்களை நேசிப்பவர்களாக (நபியே) நீ ர் காண மாட்டீர். அவர்கள் தங்களின் பெற்றோர்களாயினும் அல்லது தங்களின் ஆண்மக்களாயினும் அல்லது தங்களின் சகோதரர்களாயினும் அல்லது தங்களின் குடும்பத்தவர்களாயினும் சரியே; (காரணம்) அத்தகையோர் அவர்களின் இதயங்களில் ஈமானை (விசுவாசத்தை அல்லாஹ்வாகிய) அவன் எழுதிவிட்டான். மேலும் தன்னிடமிருந்து (வெற்றி எனும்) ரூஹைக் கொண்டு அவர்களைப் பலப்படுத்துகிறான்; இன்னும் அவர்களை சுவனங்களில் நுழையச் செய்வான் அவற்றின் மீது ஆறுகள் ஓடிக் கொண்டிருக்கும்; அவற்றில் அவர்கள் நிரந்தரமாக தங்கி இருப்பார்கள். அல்லாஹ் அவர்களைப் பொருந்திக் கொண்டான் அவனை அவர்களும் பொருந்திக் கொண்டார்கள்; அவர்கள்தான் அல்லாஹ்வின் கூட்டத்தினர். அறிந்து கொள்வீராக! நிச்சயமாக அல்லாஹ்வின் கூட்டத்தினர்-அவர்கள்தாம் வெற்றியாளர்கள். (அல்முஜாதிலா:22)*

*நஷ்டம் என்னவென்றால், இந்த அடிப்படையான விடயத்தில் மக்கள் பொடுபோக்காக இருக்கின்றார்கள். எதுவரையென்றால்*

*இஸ்லாமிய கல்வியின் பக்கம் அழைக்கக் கூடியவர்களும் தங்களை இஸ்லாமிய அழைப்பாளர்கள் என்று சொல்லக்கூடியவர்களும் இதில் பொடுபோக்காக இருக்கின்றனர்.*

*சில அழைப்பாளர்கள் கூறுகிறார்கள், கிருத்துவர்களைப் பார்த்து "அவர்கள் எங்களுடைய சகோதரர்கள்". இன்னும் சில அழைப்பாளர்கள், இணைவைப்பவர்களைப் பார்த்து "இவர்கள் நம் தொப்புள் கொடி உறவுகள்" என்று கூறுகிறார்கள். "ஓ சமுதாயத்திற்கு ஏற்பட்ட கேடே!" எவ்வளவு பாரதூரமான வார்த்தைகள் இவைகள், இதெல்லாம் அவர்கள் இஸ்லாத்தின் அடிப்படையை அறியாததின் விளைவே ஆகும்.*

*அல்லாஹ் கூறுகிறான்:* اِنَّمَا الْمُؤمِنُونَ أَخْوَة

*நிச்சயமாக விசுவாசிகள் (ஒருவர் மற்றவருக்கு) சகோதரர்களே! (அல்ஹுஜுராத்:10)*

*கொள்கை விடயத்தில், இஸ்லாமிய உம்மத்தின் மூத்த அறிஞர்கள் முதல் அதனைத் தொடர்ந்து வந்த தற்கால அறிஞர்கள் வரை அனைவராலும் வரையறை செய்து வைக்கப்ட்ட விடயம் என்னவென்றால்,*

*"எவர் ஒருவர் இறைநிராகரிப்பாளர்களைப் பார்த்து 'காஃபிர்' என்று கூறவில்லையோ; அல்லது அவனுடைய இறைநிராகரிப்பில் சந்தேகம் கொள்கின்றானோ; அல்லது அவனுடைய வழிமுறையை சரி என்று கான்கிறானோ; அவன் இஸ்லாமிய மார்க்கத்தை விட்டு வெளியேறிவிட்டான்".*

*'இஸ்லாமை முறிக்கும் விடயங்கள்' என்ற நூலில் அல்லாமா முஜத்தித் முஹம்மது இப்னு அப்துல் வஹாப் இந்த விஷயத்தை நினைவூட்டுகிறார்கள்.*

*இறைநிராகரிப்பாளர்களுடன் உறவு கொண்டாடுவதையும் இஸ்லாமிய கொள்கையின் எதிரிகளுடன் உறவு கொண்டாடுவதையும் அல்லாஹ் தடை செய்துவிட்டான். மாறாக முஃமின்களோடு, நேச த்தோடும் பாசத்தோடும் நடந்து கொள்வதை அல்லாஹ் கடமை ஆக்கிவிட்டான்.*

*அல்லாஹ் கூறுகிறான்:*

إِنَّمَا وَلِيُّكُمُ ٱللَّهُ وَرَسُولُهُۥ وَٱلَّذِينَ ءَامَنُواْ ٱلَّذِينَ يُقِيمُونَ ٱلصَّلَوٰةَ وَيُؤْتُونَ ٱلزَّكَوٰةَ وَهُمْ رَٰكِعُونَ ﴿٥٥﴾

*உங்களுடைய நன்பனெல்லாம் அல்லாஹ்வும் அவனுடைய தூதரும், இன்னும் விசுவாசங் கொண்டார்களே அவர்களும்தான்; அவர்கள் எத்தகையவரெனில் (அல்லாஹ்வின் கட்டளைக்கு) பணிந்தவர்களாக தொழுகையை நிறைவேற்றுவார்கள் ஜகாத்தும் கொடுத்து வருவார்கள். (அல்மாயிதா:55)*

وَمَن يَتَوَلَّ ٱللَّهَ وَرَسُولَهُۥ وَٱلَّذِينَ ءَامَنُوا۟ فَإِنَّ حِزْبَ ٱللَّهِ هُمُ ٱلْغَٰلِبُونَ ﴿٥٦﴾

*அன்றியும், எவர்கள் அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் விசுவாசங் கொண்டவர்களையும் (தங்களுக்குத்) தோழர்களாக எடுத்துக் கொள்கிறார்களோ (அப்பொழுது அவர்கள்தாம் அல்லாஹ்வின் கூட்டத்தினர் ஆவார்கள்) நிச்சயமாக அல்லாஹ்வின் கூட்டத்தினர் - அவர்கள்தாம் வெற்றியாளர்கள். (அல்மாயிதா:56)*

மேலும், *அல்லாஹ் கூறுகிறான்:*

مُّحَمَّدٌ رَّسُولُ ٱللَّهِ ۚ وَٱلَّذِينَ مَعَهُۥٓ أَشِدَّآءُ عَلَى ٱلْكُفَّارِ رُحَمَآءُ بَيْنَهُمْ ۖ

*முஹம்மது அல்லாஹ்வின் தூதராவார்; அவருடன் இருப்பவர்களோ நிராகரிப்போர் மீது கடினமானவர்கள் தங்களுக்கிடையே மிக அன்புடையவர்கள். (அல்ஃபதஹ்:29)*

اِنَّمَا الْمُؤمِنُونَ أِخْوَة

*நிச்சயமாக விசுவாசிகள் (ஒருவர் மற்றவருக்கு) சகோதர்களே! (அல்ஹுஜுராத்:10)*

முஃமின்கள் அனைவரும் சகோதரர்கள். அவர்களுடைய மார்க்கத்தில் அவர்களுடைய கொள்கை விஷயத்தில் அவர்களின் நிறம், நாடு, மொழி, பரம்பரை, காலங்கள் வெவ்வேறாக இருந்தாலும் சரியே முஃமின்கள் அனைவரும் சகோதரர்கள்.

*அல்லாஹ் கூறுகிறான்:*

وَٱلَّذِينَ جَآءُو مِنۢ بَعْدِهِمْ يَقُولُونَ رَبَّنَا ٱغْفِرْ لَنَا وَلِإِخْوَٰنِنَا ٱلَّذِينَ سَبَقُونَا
بِٱلْإِيمَٰنِ وَلَا تَجْعَلْ فِى قُلُوبِنَا غِلًّا لِّلَّذِينَ ءَامَنُوا۟ رَبَّنَآ إِنَّكَ رَءُوفٌ رَّحِيمٌ ﴿١٠﴾

*மேலும், அவர்களுக்குப்பின் வந்தவர்ளோ அத்தகையவர்கள், "எங்கள் இரட்சகனே! எங்களையும் விசுவாசம் கொள்வதில் எங்களை முந்திவிட்டார்களே அத்தகைய எங்களுடைய சகோதரர்களையும் நீ மன்னித்தருள் செய்வாயாக! விசுவாசங் கொண்டோர்களைப் பற்றி எங்களுடைய இதயங்களில் வெறுப்பை ஏற்படுத்தாதிருப்பாயாக! எங்கள் இரட்சகனே! நிச்சயமாக நீ மிக்க இரக்கமுடையவன் மிக்க கிருபையுடையவன்" என்று (பிரார்த்தித்து) கூறுவார்கள். (அல்ஹஷ்ர்:10)*

முதல் படைப்பிலிருந்து இறுதி படைப்பு வரை எவ்வளவு தூரமாக இருந்தாலும்; நிறம், மொழி, நாடு அவர்களுடைய காலங்கள் எவ்வளவு மாற்றமாக இருந்தாலும்; முஃமின்கள் அனைவரும் சகோதரர்கள். அவர்கள் ஒருவர் மற்றவருக்காக பிரார்த்தனை செய்து கொண்டும், பாவமன்னிப்பு கேட்டுக் கொண்டும் இருப்பார்கள்.

## இறைநிராகரிப்பாளர்களுடன் நேசம் கொள்வதும் அவர்களுக்கு உதவுதலும்

*(1) அவர்களுடைய ஆடையிலும் பேச்சுக்களிலும் இது போன்ற விஷயங்களில் இறைநிராகரிப்பாளர்களை ஒப்புமை செய்தல். ஏனென்றால், ஒருவன் அவர்களுடைய ஆடைகளிலும் பேச்சுக்களிலும் அது போன்ற விஷயங்களில் அவர்களை ஒப்புமை செய்வது அவன் அவர்கள் மீது கொண்ட பிரியத்தை வெளிப்படுத்தும். மேலும் அதனை அவன் உயர்வாக கருதுகிறான் என்பதையும் வெளிப்படுத்துகிறது.*

*இதனால்தான், நபி(ஸல்) கூறினார்கள்:*

*யார் ஒரு கூட்டத்தை ஒப்புமை செய்கிறாரோ அவர் அவரைச் ச ார்ந்தவர்.(அல் ஹதீஸ்)*

*நமது மார்க்கம் நம் மீது அதனை தடைசெய்கிறது. அவர்களுக்கென்று (இறைநிராகரிப்பாளர்கள்) உள்ள குறிப்பிட்ட விஷயங்களை நாம் பின்பற்றுவதையும் ஒப்புமை செய்வதையும் மேலும் அவர்களுடைய பழக்க வழக்கங்களையும் அவர்களுடைய வணக்கங்களையும் அவர்களுடையவழிமுறைகளையும்அவர்களுடையபண்பாடுகளையும் நாம் ஒப்புமை செய்யக் கூடாது. உதாரணமாக, அவர்களைப் போன்று தாடி வழிப்பது, மீசையை வளரவிடுவது, அவர்களுடைய மொழியில் பேசுவது அவர்களைப் போன்று அவர்களுடைய ஆடை அமைப்பை பின்பற்றுவது, அவர்களைப் போன்று உணவு உன்பது, குடிப்பது போன்ற விடயங்கள்.*

*(2) இஸ்லாமிய மார்க்கத்தை இறைநிராகரிப்பாளர்களுடைய நாட்டில் பின்பற்ற முடியாத நிலையிருந்தும் அதிலிருந்து வெளியேறி இஸ்லாமிய நாட்டிற்கு போகாமல் இருப்பதாகும். மேலும் ஹிஜ்ரத் இந்த இடத்தில் அவன் மீது கடமையாகும். இறைநிராகரிப்பாளர்களுடைய நாட்டில் தங்கியிருப்பது இறைநிராகரிப்பாளர்களோடு நேசம் கொள்வதற்கு வழிவகுக்கும். மேலும், அவன் இஸ்லாமை விட்டு வெளியேறவும் அல்லது குழப்பங்களில் விழவும் கூடும் (அல்லாஹ் பாதுகாப்பானாக). ஒருவன் இஸ்லாமை இறைநிராகரிப்பாளர்களுடய நாட்டில் பின்பற்ற முடியாமல் இருந்து அவன் ஹிஜ்ரத்திற்கு சக்தி பெற்றால் அவன் இறைநிராகரிப்பாளர்களுடைய நாட்டில் நிலைத்திருப்பது அவன் மீது 'ஹராம்' ஆகும்.*

*அல்லாஹ் கூறுகிறான்:*

إِنَّ ٱلَّذِينَ تَوَفَّىٰهُمُ ٱلْمَلَٰٓئِكَةُ ظَالِمِىٓ أَنفُسِهِمْ قَالُوا۟ فِيمَ كُنتُمْ ۖ قَالُوا۟ كُنَّا مُسْتَضْعَفِينَ فِى ٱلْأَرْضِ ۚ قَالُوٓا۟ أَلَمْ تَكُنْ أَرْضُ ٱللَّهِ وَٰسِعَةً فَتُهَاجِرُوا۟ فِيهَا ۚ
فَأُو۟لَٰٓئِكَ مَأْوَىٰهُمْ جَهَنَّمُ ۖ وَسَآءَتْ مَصِيرًا ﴿٩٧﴾

إِلَّا ٱلْمُسْتَضْعَفِينَ مِنَ ٱلرِّجَالِ وَٱلنِّسَآءِ وَٱلْوِلْدَٰنِ لَا يَسْتَطِيعُونَ حِيلَةً وَلَا يَهْتَدُونَ سَبِيلًا ﴿٩٨﴾

فَأُولَٰٓئِكَ عَسَى ٱللَّهُ أَن يَعۡفُوَ عَنۡهُمۡۚ وَكَانَ ٱللَّهُ عَفُوًّا غَفُورٗا ﴿٩٩﴾

*தமக்குத்தாமே அநீதமிழைத்துக் கொண்டவாகளாக இருக்க, அவர்களின் உயிரை மலக்குகள் கைப்பற்றும் பொழுது (அவர்களிடம்) "நீங்கள் எதில் இருந்தீர்கள்?" என கேட்பார்கள். அதற்கவர்கள் "இப்பூமியில் நாங்கள் பலவீனமாக்கப் பட்டவர்களாக இருந்தோம்" என்று பதில் கூறுவார்கள். (அதற்கு மலக்குகள்) "அல்லாஹ்வுடைய பூமி விசாலமானதாக இல்லையா? நீங்கள் (இருந்த) இவ்விடத்தைவிட்டு ஹிஜ்ரத்துச் செய்து புறப்பட்டிருக்க வேண்டாமா?" என்று கேட்பார்கள். இத்தகையோர் அவர்கள் தங்குமிடம் நரகம்தான்; செல்லுமிடத்தில் அது மிகவும் கெட்டது. (அந்நிஸா:97)*

*ஆனால், ஆண்களிலும் பெண்களிலும் சிறுவர்களிலும் பலஹீனமாக்கப்பட்டவர்களைத் தவிர (இவர்கள்) யாதொரு உபாயமும் செய்து கொள்ள சக்தி பெறமாட்டார்கள்; (அதைவிட்டு வெளியேற) எந்த வழியையும் அறியமாட்டார்கள். (அந்நிஸா:98)*

*ஆகவே, அத்தகையோர்-அவர்களை அல்லாஹ் மன்னித்துவிடக் கூடும். இன்னும் அல்லாஹ் மிக்க மன்னிப்பவனாகவும் (பிழைகளை) மிக பொருப்பவனாகவும் இருக்கிறான். (அந்நிஸா:99)*

இறைநிராகரிப்பாளர்களுடைய நாட்டிலிருந்து ஹிஜ்ரத் செய்ய சக்தி பெறாதவர்களும். மேலும், தீனை சீர்த்திருத்தம் செய்ய வேண்டியிருப்பவர்களும்; தீனை பரப்ப அழைப்புப் பணியிலிருப்பவர் களும் இறைநிராகரிப்பாளர்களுடைய நாட்டில் தங்குவது ஆகுமான தாகும். மேலும் தன்னுடைய தீனை முழுமையாக நிலைநாட்ட முடியும் என்று இருக்கும் பொழுது இறைநிராகரிப்பாளர்களுடைய நாட்டில் தங்குவது ஆகுமானதாகும்.

(3) இறைநிராகரிப்பாளர்களுடைய நாட்டிற்கு பயணம் செய்வது; மேலும் அவர்களுடைய நாட்டிற்கு இன்பம் அனுபவிப்பதற்காக சு ற்றுலா செல்வதும் தடைசெய்யப்பட்ட ஒரு விடயம் ஆகும். கிசிச்சை, வியாபாரம் அந்த நாட்டின் பயணம் இல்லாமல் அடைய முடியாது எனும் பொழுது, உன்னுடைய தேவையை பொருத்து அந்நாட்டிற்கு பயணம் செய்வது ஆகுமானதாகும். மேலும், உன்னுடைய தேவையை முடித்தவுடன் நீ உனது நாட்டிற்கு திரும்புவது அவசியம். நீ இறைநிராகரிப்பாளர்களுடைய நாட்டில் இருக்கும் பொழுது சில விடயங்களை நீ செயல்படுத்தியாக வேண்டும். அப்போதுதான் அந்தப் பயணம் உனக்கு ஆகுமாகும். நீ உன்னுடைய தீனை வெளிப்படையாக பின்பற்ற வேண்டும். உன்னுடைய மார்க்கத்தை பின்பற்றுவதை கொண்டு நீ பெருமைப்பட்டவனாக இருக்க வேண்டும். உனக்கும் உனது மார்க்கத்திற்கும் பாதிப்பு ஏற்படுத்தக் கூடிய இடங்களை விட்டும்

*நீ தூரமாக இருக்க வேண்டும்.எதிரிகளுடைய சூழ்ச்சிகளை விட்டும் நீ எச்சரிக்கையாக இருக்க வேண்டும். மேலும் அவர்களுடைய நாட்டை நோக்கி பயணம் செய்வது ஆகுமானதாகும் தஃவாவிற்காகவும் தீனுல் இஸ்லாமை பரப்புவதற்காகவும்.*

*(4) இறைநிராகரிப்பாளர்களுக்கு மேல் உள்ள நேசம் வெளியாகுகிற மற்றுமொரு விடயம் என்னவென்றால் முஸ்லிம்களுக்கு எதிராக இறைநிராகரிப்பாளர்களுக்கு ஒத்துழைப்பதும் உதவி செய்வதுமாகும். மேலும் அவர்களைப் புகழ்வதும் அவர்களைப் பாதுகாப்பதும். இது ஒரு மனிதனை தீனுல் இஸ்லாமிலிருந்து வெளியேற்றக் கூடிய காரியமாகும்.*

*(5) இறைநிராகரிப்பாளர்களைக் கொண்டு உதவி தேடுவதும்; அவர்களை நம்பிக்கை கொள்வதும் மு ஸ்லிம்களின் ரகசியங்கள் உள்ளடக்கிய பொறுப்புகளை அவர்களுக்கு கொடுப்பதும்; அவர்களை தலைவர்களாகவும் ஆலோசனையாளர்களாகவும் எடுத்துக் கொள்வதும் அவர்களை தோழமை கொள்வதில் உள்ளதாகும்.*

*அல்லாஹ் கூறுகிறான்:*

يَـٰٓأَيُّهَا ٱلَّذِينَ ءَامَنُوا۟ لَا تَتَّخِذُوا۟ بِطَانَةً مِّن دُونِكُمْ لَا يَأْلُونَكُمْ خَبَالًا وَدُّوا۟ مَا عَنِتُّمْ قَدْ بَدَتِ ٱلْبَغْضَآءُ مِنْ أَفْوَٰهِهِمْ
لَكُمُ ٱلْـَٔايَـٰتِ ۖ إِن كُنتُمْ تَعْقِلُونَ ﴿١١٨﴾

*விசுவாசங் கொண்டோரே! உங்(கள் இனத்தவர்)களையன்றி (மற்றவர்களை) உங்களுடைய அந்தரங்கச் செய்திகளை அறிபவர்களாக நீங்கள் ஆக்கிக் கொள்ளாதீர்கள்; (ஏனென்றால்) அவர்கள் உங்களுக்குத் தீங்கிழைப்பதில் ஒரு சிறிதும் குறைவு செய்வதில்லை; மேலும் நீங்கள் துன்புறுவதை அவர்கள் விரும்புகிறார்கள். அவர்களுடைய வாய்(ச் செ ால்)களிலிருந்தே (அவர்களுடைய) கடுமையான வெறுப்பு திட்டமாக வெளிப்பட்டுவிட்டது. ( உங்களைப் பற்றி) அவர்களுடைய நெஞ்சங்கள் மறைத்து வைத்திருப்பவையோ மிகப்பெரியதாகும். நீங்கள் விளங்கிக் கொள்பவர்களாக இருந்தால் நிச்சயமாக நாம் (அவர்களுடைய) அடையாளங்களை உங்களுக்குத் தெளிவாக்கிவிட்டோம். (ஆலஇம்ரான்:118)*

هَـٰٓأَنتُمْ أُو۟لَآءِ تُحِبُّونَهُمْ وَلَا يُحِبُّونَكُمْ وَتُؤْمِنُونَ بِٱلْكِتَـٰبِ كُلِّهِۦ وَإِذَا لَقُوكُمْ قَالُوٓا۟ ءَامَنَّا وَإِذَا خَلَوْا۟ عَضُّوا۟ عَلَيْكُمُ
ٱلْأَنَامِلَ مِنَ ٱلْغَيْظِ ۚ قُلْ مُوتُوا۟ بِغَيْظِكُمْ ۗ إِنَّ ٱللَّهَ عَلِيمٌۢ بِذَاتِ ٱلصُّدُورِ ﴿١١٩﴾

*(விசுவாசங் கொண்டோரே!) தெரிந்து கொள்ளுங்கள், நீங்கள் அவர்களை நேசிக்கிறீர்கள், அவர்களோ உங்களை நேசிப்பதில்லை; நீங்கள் வேதங்கள் யாவற்றையும் விசுவாசிக்கிறீர்கள். இன்னும் அவர்கள் உங்களை சந்தித்தால் 'நாங்கள் விசுவாசிக்கின்றோம்' என்று கூறுகின்றனர். இன்னும் (உங்களிலிருந்து விலகி) அவர்கள் தனித்து விட்டாலோ (உங்கள் மீதுள்ள) ஆத்திரத்தினால் (தங்கள் கை) விரல்களின் நுனிகளை கடித்துக் கொள்கின்றனர். ஆகவே (நபியே!*

*அவர்களிடம்) நீர் கூறுவீராக, 'உங்கள் ஆத்திரத்திலேயே நீங்கள் இறந்து விடுங்கள்! நிச்சயமாக அல்லாஹ் (உங்கள்) நெஞ்சங்களில் உள்ளவற்றை நன்கறிவான்'. (ஆலஇம்ரான்:119)*

இந்த வசனம் இறைநிராகரிப்பாளர்கள் மறைத்து வைத்திருக்கக் கூடிய அந்தரங்க விடயங்களை தெளிவுபடுத்துகிறது. அவர்கள் இறைநம்பிக்கையாளர்களுக்கு நோவினை ஏற்படுத்த வேண்டும் என்கிற அவர்களுடைய திட்டத்தையும் அல்லாஹ் வெளிப்படுத்துகிறான்.

இமாம் அஹ்மது இப்னு ஹம்பல் அவர்கள் அபூ மூஸா அஸ்அரி (ரழி) அறிவிப்பதாக கூறுகிறார்கள்,

*நான் உமர் (ரழி) அவர்களிடம் "எனக்கு ஒரு கிருஸ்த்துவ எழுத்தாளர் இருக்கிறான்" என்று கூறினேன் அதற்கு அவர் கூறினார் "அல்லாஹ் உன்னை கொல்வானாக, நீ அல்லாஹ் அவனுடைய வேதத்தில் என்ன சொல்கிறான் என்பதை கேள்விப்படவில்லையா?"*

يَٰٓأَيُّهَا ٱلَّذِينَ ءَامَنُواْ لَا تَتَّخِذُواْ ٱلْيَهُودَ وَٱلنَّصَٰرَىٰٓ أَوْلِيَآءَ بَعْضُهُمْ أَوْلِيَآءُ بَعْضٍ

'விசுவாசங் கொண்டோரே! யூதர்களையும் கிறிஸ்த்துவர்களையும் (உங்களுக்கு) நன்பர்களாக எடுத்துக் கொள்ளாதீர்கள்...' என்ற வசனத்தை ஓதிவிட்டு மேலும் கூறினார்கள், "நீர் அவனை தோழனாக ஆக்கிக் கொண்டீரா?"

*நான் கூறினேன், "ஓ அமீருல் முஃமினீன் அவர்களே! எனக்கு அவனுடைய வேலை (எழுதுவது மட்டும்தான்) அவனுக்கு அவனுடைய மார்க்கம்".*

*உமர்(ரழி) கூறினார்கள், "அல்லாஹ் அவர்களை இழிவுபடுத்திய பிறகு எந்த ஒரு கண்ணியமும் அவர்களுக்கு இல்லை, அவர்களை கேவலப்படுத்திய பின் எந்த ஒரு சிறப்பும் இல்லை, அல்லாஹ் அவர்களை தூரப்படுத்திய பின் எந்தவொரு நெருக்கமும் இல்லை".*

*நபி (ஸல்) அவர்கள் பத்ர் யுத்தத்திற்கு புறப்பட்டபொழுது இணை வைப்பாளர்களில் ஒருவன் அவரைப் பின் தொடர்ந்து சென்றான். 'குர்ரா' என்ற இடத்தில் அவன் நபியவர்களைச் சந்தித்து, "நான் உங்களுடன் போரில் கலந்து கொள்வதற்காக உம்மைப் பின் தொடர்ந்து வந்தேன்" என்று கூறினான். நபி (ஸல்) அவர்கள் அவனிடம் கேட்டார்கள், "நீ அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் ஈமான் (நம்பிக்கை) கொண்டிருக்கிறாயா?" அதற்கு அவன் "இல்லை" என்றான். உடனே நபி (ஸல்) கூறினார்கள், "நீ திரும்பிச் சென்றுவிடு நான் ஒருபோதும் இணைவைப்பாளர்களிடம் உதவி கோரமாட்டேன்".*

நபி (ஸல்) அவர்களுடைய வார்த்தை நமக்கு தெளிவுபடுத்துகிறது. இறைநிராகரிப்பாளர்களை நமக்கு நெருங்கிய தோழர்களாகவோ பொறுப்பாளிகளாகவோ வேலையாட்களாகவோ ஆக்கிக் கொள்ளக்

கூடாது. அதன் மூலம் அவர்கள் இறைநம்பிக்கையாளர்களுடைய நிலையை அறிந்து அவர்களுக்கு எதிராக சூழ்ச்சி செய்யக் கூடும். மேலும் அவர்களுக்கு தீங்கு விளைவிக்கக் கூடும். மாறாக, இன்று நிகழக்கூடியது என்னவென்றால் இறைநிராகரிப்பாளர்களை மக்கா, மதினா போன்ற 'புனிதமான' இடங்களில் வேலைக்கு எடுத்துக் கொள்கிறார்கள். வாகன ஓட்டுனர்களாகவும் வீட்டு வேலை செய்யக் கூடியவர்களாகவும் வீட்டை பராமரிக்கக் கூடியவர்களாகவும். இதன் மூலம் அவர்கள் அந்த குடும்பத்தில் உள்ளவர்களோடு கலந்து விடுகின்றனர். நமது நாட்டில் உள்ள வேதனை என்னவென்றால், அவர்களை 'தொப்புள் கொடி உறவுகள்' என்று சொல்லிக் கொண்டு அவர்களுடன் உறவாடுகின்றனர்; அவர்களுடைய திருநாட்களில் கலந்து கொள்கின்றார்கள். அவர்கள் அவர்களுடைய கடவுள்களுக்கு படைத்தவற்றை இவர்கள் உண்ணவும் செய்கிறார்கள்.

மாறாக, அல்லாஹ் இதனை நமக்கு தடை செய்துள்ளான். நீங்கள் அவர்களோடு நல்லமுறையில் நீதியோடு அவர்களுக்கு நன்மை செய்வதில் எந்தகுறையுமில்லை. நீங்கள் இறைநிராகரிப்பாளர்களோடு வியாபாரத்தில் ஈடுபடுகின்ற பொழுது அவர்களோடு அநீதமாக நடந்து கொள்வதைதான் இம்மார்கம் நமக்கு தடை செய்திருக்கிறது. மாறாக நல்ல முறையில் நீதியாக நடந்து கொள்ள வேண்டும். உங்கள் அன்டை வீட்டாராக இணைவைப்பாளர்கள் இருக்கும் பொழுது அவர்களுடன் நீங்கள் நல்ல முறையில் நடந்து கொண்டாக வேண்டும். அன்டை வீட்டாருக்குள்ள கடமையை கட்டாயமாக நிறைவேற்றியாக வேண்டும். மேலும், மார்க்கம் தடை செய்தவற்றை விட்டு நீங்கள் விலகிக் கொள்ள வேண்டும்.

(6) இறைநிராகரிப்பாளர்களுடைய நேசம் வெளியாகுகின்ற மற்றொரு விடயம் என்னவென்றால் அவர்களுக்கென்று உள்ள தனிப்பட்ட வரலாற்றை எழுதுவது. அவர்களுடைய பழக்க வழக்கங்கள் அவர்களுடைய திருநாட்கள் அவர்களுடைய தலைவர்கள் வரலாற்றை எழுதுவது. சில இஸ்லாமிய எழுத்தாளர்கள் ஈஸா (அலை) அவர்களுடைய வரலாற்றை யூத,கிறிஸ்தவர்களால் திரிக்கப்பட்டதிலி ருந்தும் அவர்களுடைய பேச்சுக்களிலிருந்தும் எழுதுகிறார்கள். அது உண்மையான வரலாறு அல்ல. அது அவர்களால் இட்டுக்கட்டப்பட்ட கதை. மாறாக, இந்த எழுத்தாளர்கள் அவர்களுடைய பொய்யான வரலாறுகளையும் அவர்களுடைய அடையாளச் சின்னங்களையும் இவர்கள் உயிர்ப்பிக்கின்றனர்.

உமர் (ரழி) அவர்களுடைய காலத்தில் சஹாபாக்கள் வரலாற்றை எழுதியபோது இறைநிராகரிப்பாளர்களுடைய வரலாற்றை விட்டு விட்டு நபி (ஸல்) ஹிஜ்ரத்தை வரலாறாக எழுதியுள்ளார்கள்.

*(7) இறைநிராகரிப்பாளர்களுக்கு மேல் உள்ள நேசம் வெளியாகுகின்ற மற்றொரு விடயம். அவர்களுடைய திருநாட்களில், பண்டிகைகளில் கலந்து கொள்வது; அதை நிலைநாட்டுவதில் ஒத்துழைப்பது; அதை தயார்படுத்த உதவிபுரிவது.*

*அல்லாஹ் கூறுகின்றான்:*

وَٱلَّذِينَ لَا يَشۡهَدُونَ ٱلزُّورَ وَإِذَا مَرُّواْ بِٱللَّغۡوِ مَرُّواْ كِرَامٗا ﴿٧٢﴾

*(ஒருகால்) வீணான காரியம் நடக்கும் இடத்தின் பக்கம் சென்று விட்டால், கண்ணியமானவர்களாக (அதனைவிட்டு) ஒதுங்கிச் சென்று விடுவார்கள். (அல்ஃபுர்கான்:72)*

இந்த வசனம் அல்லாஹ்வுடைய அடியார்களின் பண்பை வர்ணிக் கின்றது. அவர்கள் எத்தகையவர்கள் என்றால் கெட்ட விடயங்களில் கலந்து கொள்ள மாட்டார்கள்.

*(8) இறைநிராகரிப்பாளர்களுக்கு மேல் உள்ள நேசம் வெளியாகுகின்ற மற்றொரு விடயம் அவர்களுடைய வழிகெட்ட கொள்கையை பார்க் காமல், அவர்களுடைய அசத்திய மார்க்கத்தை பார்க்காமல்; அவர்கள் இருக்கக் கூடிய இடத்தை உயர்த்திப் பேசுவது, அவர்களுடைய திறமைகளை உயர்த்திப் பேசுவது, மேலும் அவர்களைப் புகழ்வது போன்றவைகள்.*

*அல்லாஹ் கூறுகின்றான்:*

وَلَا تَمُدَّنَّ عَيۡنَيۡكَ إِلَىٰ مَا مَتَّعۡنَا بِهِۦٓ أَزۡوَٰجٗا مِّنۡهُمۡ زَهۡرَةَ ٱلۡحَيَوٰةِ ٱلدُّنۡيَا لِنَفۡتِنَهُمۡ فِيهِۚ وَرِزۡقُ رَبِّكَ خَيۡرٞ وَأَبۡقَىٰ ﴿١٣١﴾

*(நபியே!) அவர்களில் சில பிரிவினருக்கு உலக வாழ்க்கையின் அலங்காரமாக எதைக் கொண்டு சுகமனுபவிக்கச் செய்திருக்கிறோமோ அதன் பக்கம் உம்முடைய இரு கண்களையும் நீர் திண்ணமாகச் செலுத்த வேண்டாம். (இவை யாவும்) அதில் அவர்களை சோதிப்ப தற்காகவே (நாம் கொடுத்திருக்கிறோம்) ஆனால் உம் இரட்சகன் (உமக்கு மறுமையில்) கொடுக்கவிருப்பது மிகச்சிறந்ததும் மிக நிலையானது மாகும். (தாஹா:131)*

*(9) இறைநிராகரிப்பாளர்களுக்கு மேல் உள்ள நேசம் வெளிப்படும் மற்றொரு விடயம் அவர்களுடைய பெயர்களை வைப்பது. சில நல்ல பெயர்களை விட்டுவிட்டு அவர்களுடைய பிரபல்யமான பெயர்களை சூட்டுகிறார்கள்.*

*நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள், ''சிறந்த பெயர்கள் அப்துல்லாஹ், அப்துர் ரஹ்மான் ஆகும்''.*

*முன்பு பெயர்களைக் கொண்டு முஸ்லிம்கள் அடையாளம் காணப்பட்டது. இப்பொழுது பெயர் சொல்லப்பட்ட பின்பும் 'நீ முஸ்லிமா? இது முஸ்லிம் பெயர்தானா?' என்று கேட்கும் நிலை. (அல்லாஹ் பாதுகாப்பானாக)*

*(10) அவர்களுக்காக பாவமன்னிப்பு தேடுவதும், அவர்களின் மேல் இரக்கம் கொள்வதும். இது அல்லாஹ்வால் தடை செய்யப்பட்ட ஒன்று.*

*அல்லாஹ் கூறுகிறான்:*

مَا كَانَ لِلنَّبِيِّ وَالَّذِينَ ءَامَنُوٓا۟ أَن يَسْتَغْفِرُوا۟ لِلْمُشْرِكِينَ وَلَوْ كَانُوٓا۟ أُو۟لِى قُرْبَىٰ مِنۢ بَعْدِ مَا تَبَيَّنَ
لَهُمْ أَنَّهُمْ أَصْحَٰبُ ٱلْجَحِيمِ ﴿١١٣﴾

*நபிக்கோ, விசுவாசிகளுக்கோ இணைவைத்துக் கொண்டிருப் போருக்காக அவர்கள் (இவர்களுடைய) நெருங்கிய பந்துக்களாக இருந்தாலும், அவர்கள் நிச்சயமாக நரகவாசிகள்தாம் என்று இவர்களுக்கு தெளிவான பின்னர் மன்னிப்புக் கோருவது ஆகுமானதல்ல. (அத்தவ்பா:113)*

## இறைநம்பிக்கையாளர்களுடன் நேசம் கொள்வதும், அவர்களுக்கு உதவுதலும்:

*முஃமின்களோடு நேசம் கொள்ளும் விடயத்தை குர்ஆனும் சுன்னாவும் நமக்கு தெளிவுபடுத்தி உள்ளது.*

*(1) இறைநிராகரிப்பாளர்களுடைய நாட்டை விட்டுவிட்டு முஸ்லிம்களுடைய நாட்டிற்கு ஹிஜ்ரத் செய்வது, தனது தீனை காப்பாற்ற வேண்டி. 'ஹிஜ்ரத்' கியாமத் நாள் வரை உள்ள கடமையாகும். மேலே குறிப்பிட்ட அந்த நிபந்தனைகளை உள்ளடக்காமல் ஒரு முஸ்லிம் இறைநிராகரிப்பாளர்களுடைய நாட்டில் அவர்கள் மதத்தை சரியென்று பார்த்துக் கொண்டு வாழ்வது அவன் மீது 'ஹராம்' ஆகும். ஹிஜ்ரத் செய்ய சக்தியற்றவர்கள், தீனை சீர்திருத்தம் செய்ய வேண்டி இறைநிராகரிப் பாளர்களுடைய நாட்டில் தங்குவது ஆகுமானதாகும்.*

*அல்லாஹ் கூறுகிறான்:*

إِنَّ ٱلَّذِينَ تَوَفَّىٰهُمُ ٱلْمَلَٰٓئِكَةُ ظَالِمِىٓ أَنفُسِهِمْ قَالُوا۟ فِيمَ كُنتُمْ ۖ قَالُوا۟ كُنَّا مُسْتَضْعَفِينَ فِى ٱلْأَرْضِ ۚ قَالُوٓا۟ أَلَمْ تَكُنْ أَرْضُ ٱللَّهِ وَٰسِعَةً فَتُهَاجِرُوا۟ فِيهَا ۚ
فَأُو۟لَٰٓئِكَ مَأْوَىٰهُمْ جَهَنَّمُ ۖ وَسَآءَتْ مَصِيرًا ﴿٩٧﴾

إِلَّا ٱلْمُسْتَضْعَفِينَ مِنَ ٱلرِّجَالِ وَٱلنِّسَآءِ وَٱلْوِلْدَٰنِ لَا يَسْتَطِيعُونَ حِيلَةً وَلَا يَهْتَدُونَ سَبِيلًا ﴿٩٨﴾

فَأُو۟لَٰٓئِكَ عَسَى ٱللَّهُ أَن يَعْفُوَ عَنْهُمْ ۚ وَكَانَ ٱللَّهُ عَفُوًّا غَفُورًا ﴿٩٩﴾

*தமக்குத்தாமே அநீதமிழைத்துக் கொண்டவர்களாக இருக்க அவர்களின் உயிரை மலக்குகள் கைப்பற்றும் பொழுது (அவர்களிடம்) "நீங்கள் எதில் இருந்தீர்கள்?" என கேட்பார்கள். அதற்கவர்கள் "இப்பூமியில் நாங்கள் பலவீனமாக்கப்பட்டவர்களாக இருந்தோம்" என்று பதில் கூறுவார்கள். (அதற்கு மலக்குகள்) "அல்லாஹ்வுடைய பூமி விசாலமானதாக இல்லையா? நீங்கள் (இருந்த) இவ்விடத்தைவிட்டு ஹிஜ்ரத்துச் செய்து புறப்பட்டிருக்க வேண்டாமா?" என்று கேட்பார்கள். இத்தகையோர் அவர்கள் தங்குமிடம் நரகம்தான்; செல்லுமிடத்தில் அது*

*மிகவும் கெட்டது. (அந்நிஸா:97)*

*ஆனால் ஆண்களிலும் பெண்களிலும் சிறுவர்களிலும் பலஹீனமாக் கப்பட்டவர்களைத் தவிர (இவர்கள்) யாதொரு உபாயமும் செய்து கொள்ள சக்தி பெறமாட்டார்கள் (அதைவிட்டு வெளியேற) எந்த வழியையும் அறியமாட்டார்கள். (அந்நிஸா:98)*

*ஆகவே, அத்தகையோர்-அவர்களை அல்லாஹ் மன்னித்துவிடக் கூடும். இன்னும் அல்லாஹ் மிக்க மன்னிப்பவனாகவும் (பிழைகளை) மிக பொறுப்பவனாகவும் இருக்கிறான். (அந்நிஸா:99)*

*(2)* மார்க்கம் மற்றும் உலக விவகாரங்களில் தேவையுடைய இறைநம் பிக்கையாளர்களுக்கு நாம் நமது உடல், உயிர், பொருள் மற்றும் நாவைக் கொண்டு உதவி புரிதல்.

*அல்லாஹ் கூறுகிறான்:*

وَٱلْمُؤْمِنُونَ وَٱلْمُؤْمِنَٰتُ بَعْضُهُمْ أَوْلِيَآءُ بَعْضٍ ۚ يَأْمُرُونَ بِٱلْمَعْرُوفِ وَيَنْهَوْنَ عَنِ ٱلْمُنكَرِ وَيُقِيمُونَ ٱلصَّلَوٰةَ وَيُؤْتُونَ ٱلزَّكَوٰةَ وَيُطِيعُونَ ٱللَّهَ وَرَسُولَهُۥٓ ۚ أُو۟لَٰٓئِكَ سَيَرْحَمُهُمُ ٱللَّهُ ۗ إِنَّ ٱللَّهَ عَزِيزٌ حَكِيمٌ ﴿٧١﴾

*விசுவாசங்கொண்ட ஆண்களும் விசுவாசங்கொண்ட பெண்களும் அவர்களில் சிலர் சிலருக்கு உற்ற காரியஸ்தர்களாக இருக்கின்றனர்; அவர்கள் (பிறரை) நன்மையைக் கொண்டு ஏவுகிறார்கள், (மார்க்கத்தில் மறுக்கப்பட்ட) தீமையைவிட்டும் விலக்குகிறார்கள். தொழுகையையும் நிறைவேற்றுகிறார்கள்; ஜகாத்தையும் கொடுத்து வருகிறார்கள். அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் கீழ்ப்பட்டு நடக்கிறார்கள். இத்தகையோர் அல்லாஹ் அவர்களுக்கு அருள் புரிவான்-நிச்சயமாக அல்லாஹ் (யாவரையும்) மிகைத்தவன் தீர்க்கமான அறிவுடையவன். (அத்தவ்பா:71)*

*மேலும் அல்லாஹ் கூறுகிறான்:*

وَإِنِ ٱسْتَنصَرُوكُمْ فِى ٱلدِّينِ فَعَلَيْكُمُ ٱلنَّصْرُ إِلَّا عَلَىٰ قَوْمٍۭ بَيْنَكُمْ وَبَيْنَهُم مِّيثَٰقٌ ۗ وَٱللَّهُ بِمَا تَعْمَلُونَ بَصِيرٌ ﴿٧٢﴾

*(எனினும்) அவர்கள் மார்க்க விஷயத்தில் உங்களிடம் உதவி தேடினாலோ (அவர்களுக்கு) உதவி செய்வது உங்கள் மீது கடமை யாகும். (ஆயினும் வேறொரு சமூகத்தாராகிய) அவர்களுக்கும் உங்களுக்குமி டையில் உடன்படிக்கை உள்ள (தோ அந்த) அந்த சமூகத்தாரைத் தவிர, (அவர்களுக்கு விரோதமாக உதவி செய்யக் கூடாது). மேலும் அல்லாஹ் நீங்கள் செய்பவைகளை பார்க்கிறவன். (அல்அன்ஃபால்:72)*

*(3)* அவர்களுடைய மகிழ்ச்சியில் நம்முடைய மகிழ்ச்சியும், அவர்களு டைய கவலையில் நம்முடைய கவலையும், அவர்களுடைய சிரிப்பில் நமது சிரிப்பும், அவர்களுடைய அழுகையில் நமது அழுகையும் இருத்தல் வேண்டும்.

நபி (ஸல்) கூறினார்கள், ஒருவருக்கொருவர் அன்பு கொள்வதிலும், அன்பு பாராட்டிக் கொள்வதிலும், அவர்களுடன் இணைந்து வாழ்வதிலும் நம்பிக்கையாளர்களுக்கு உதாரணம் 'ஓர் உடலைப்' போன்றவர்கள். அதில் ஏதாவது ஓர் உறுப்பு நோய்வினை அடைந்தால் மற்ற உறுப்புகள் காய்சலாலும் தூக்கமின்மையாலும் முறையிடும். (புகாரி,முஸ்லிம்)

நபி (ஸல்) கூறினார்கள், முஃமின்களுக்கு உதாரணம் 'ஒரு கட்டிடத்தை' போன்றதாகும். ஒரு பகுதி மற்றொரு பகுதிக்கு வலுசேர்க்கும். அப்போது நபி (ஸல்) அவர்கள் தம் கைவிரல்களைக் கோர்த்து காண்பித்தார்கள். (அல்ஹதீஸ்)

(4) எந்த ஒரு ஏமாற்றம் , மோசடி இல்லாமல் அவர்களுக்கு நன்மையை நாடுவது உபதேசம் செய்வது.

"உங்களில் ஒருவரும் ஈமான் கொண்டவராக முடியாது! தனக்கு விரும்புவதை தன் சகோதரனுக்கும் விரும்பாதவரை". (அல்ஹதீஸ்)

மேலும், நபி (ஸல்) கூறினார்கள், "ஒரு முஸ்லிம் மற்றொரு முஸ்லிமுக்கு சகோதரன் ஆவான். அவர் மற்றவருக்கு அநீதி இழைக்க வேண்டாம்; அவரை ஆதரவற்றவராக விட்டுவிட வேண்டாம்; ஒரு முஸ்லிமான சகோதரனை இழிவாக எண்ணுவதே மனிதனுக்குத் தீமையால் போதுமானதாகும். ஒவ்வொரு முஸ்லிமிற்கும் இன்னொரு முஸ்லிமின் அவரது கண்ணியமும், அவரது சொத்தும், அவரது ரத்தமும் விலக்கப்பட்டதாகும்".

மேலும், நபி (ஸல்) கூறினார்கள்:

நீங்கள் ஒருவருக்கொருவர் குரோதம் கொள்ள வேண்டாம்; ஒருவருக்கொருவர் புறக்கணித்துக் கொள்ள வேண்டாம். இன்னும் விற்பனையாளருக்கு அல்லது வாங்குவோருக்கு தீங்களிப்பதற்காக விலையை அதிகரிக்க வேண்டாம். உங்களில் சிலர் சிலருக்கு எதிராக வியாபாரம் செய்ய வேண்டாம்.

(5) எந்த ஒரு குறையும் கூறாமல் முஸ்லிம் சகோதரர்களை கண்ணியப்படுத்துவது.

அல்லாஹ் கூறுகிறான்:

يَٰٓأَيُّهَا ٱلَّذِينَ ءَامَنُواْ لَا يَسۡخَرۡ قَوۡمٞ مِّن قَوۡمٍ عَسَىٰٓ أَن يَكُونُواْ خَيۡرٗا مِّنۡهُمۡ وَلَا نِسَآءٞ مِّن نِّسَآءٍ عَسَىٰٓ أَن يَكُنَّ خَيۡرٗا مِّنۡهُنَّۖ وَلَا تَلۡمِزُوٓاْ
أَنفُسَكُمۡ وَلَا تَنَابَزُواْ بِٱلۡأَلۡقَٰبِۖ بِئۡسَ ٱلِٱسۡمُ ٱلۡفُسُوقُ بَعۡدَ ٱلۡإِيمَٰنِۚ وَمَن لَّمۡ يَتُبۡ فَأُوْلَٰٓئِكَ هُمُ ٱلظَّٰلِمُونَ ١١

விசுவாசிகளே! ஒரு சமூகத்தார் மற்றொரு சமூகத்தாரைப் பரிகாசம் செய்ய வேண்டாம்;(பரிகாசம் செய்யப்பட்ட) அவர்கள் (பரிகாசம் செய்யும்) இவர்களை விடச் சிறந்தவர்களாக இருக்கலாம். (அவ்வாறே) எந்தப் பெண்களும் மற்ற எந்தப் பெண்களையும் (பரிகாசம் செய்ய வேண்டாம், பரிகாசம் செய்யப்பட்ட) அவர்கள் (பரிகாசம் செய்யும்) இவர்களை விட மிகச் சிறந்தவர்களாக இருக்கலாம். உங்களில் சிலர்

*சிலரை குறை கூறவும் வேண்டாம்; உங்களில் சிலர் சிலரை (அவருக்கு வைக்கப்படாத) பெயர்களால் அழைக்கவும் வேண்டாம். விசுவாசங் கொண்ட பின்னர், (தீயவற்றைக் குறித்துக் காட்டும்) தீய பெயர் (கூறுவது) மிகக் கெட்டதாகி விட்டது. எவர்கள் (இவைகளிலிருந்து) தவ்பாச் செய்து மீளவில்லையோ அவர்களே அநியாயக்காரர்கள். (அல்ஹுஜுராத்:11)*

يَـٰٓأَيُّهَا ٱلَّذِينَ ءَامَنُوا۟ ٱجْتَنِبُوا۟ كَثِيرًا مِّنَ ٱلظَّنِّ إِنَّ بَعْضَ ٱلظَّنِّ إِثْمٌ ۖ وَلَا تَجَسَّسُوا۟ وَلَا يَغْتَب بَّعْضُكُم بَعْضًا ۚ أَيُحِبُّ أَحَدُكُمْ أَن يَأْكُلَ لَحْمَ أَخِيهِ مَيْتًا فَكَرِهْتُمُوهُ ۚ وَٱتَّقُوا۟ ٱللَّهَ ۚ إِنَّ ٱللَّهَ تَوَّابٌ رَّحِيمٌ ﴿١٢﴾

*விசுவாசிகளே! (தவறான) எண்ணத்தில் பெரும்பாலானவற்றை நீங்கள் தவிர்த்துக் கொள்ளுங்கள். (ஏனெனில்) நிச்சயமாக எண்ணத்தில் சில பாவமாகும்; (எவருடைய குறைகளையும்) நீங்கள் துருவித் துருவி விசாரித்துக் கொண்டிருக்கவும் வேண்டாம்; உங்களில் சிலர் சிலரைப் புறம் பேசவும் வேண்டாம். உங்களில் யாறொருவர் தன்னுடைய சகோதரரின் மாமிசத்தை (அவர் இறந்து) சவமாகயிருக்கும் நிலையில் புசிக்க விரும்புவாரா? அப்போது, அதனை நீங்கள் வெறுத்து விடுவீர்கள். இன்னும் நீங்கள் அல்லாஹ்வுக்குப் பயந்து கொள்ளுங்கள். நிச்சயமாக அல்லாஹ், (பாவத்திலிருந்து தவ்பாச் செய்து மீள்வோரின்) பாவமீட்சியை மிகுதியாக ஏற்பவன் மிகக் கிருபையுடையவன். (அல் ஹுஜுராத்:12)*

*(6) எந்த ஒரு நயவஞ்சகத் தன்மையும் இல்லாமல் இறைநம்பிக்கை கொண்ட சகோதரர்களுடன் கஷ்டமான நேரங்களிலும், மகிழ்ச்சியான நேரங்களிலும், செல்வமுள்ள நேரங்களிலும், வறுமையான நேரங்களிலும் உடன் இருப்பது. செல்வமுள்ள நேரத்தில் உடன் இருந்து விட்டு வறுமையின் போது விட்டுவிடுவது கூடாது.*

*அல்லாஹ் கூறுகிறான்:*

ٱلَّذِينَ يَتَرَبَّصُونَ بِكُمْ فَإِن كَانَ لَكُمْ فَتْحٌ مِّنَ ٱللَّهِ قَالُوٓا۟ أَلَمْ نَكُن مَّعَكُمْ وَإِن كَانَ لِلْكَـٰفِرِينَ نَصِيبٌ قَالُوٓا۟ أَلَمْ نَسْتَحْوِذْ عَلَيْكُمْ وَنَمْنَعْكُم مِّنَ ٱلْمُؤْمِنِينَ ۚ فَٱللَّهُ يَحْكُمُ بَيْنَكُمْ يَوْمَ ٱلْقِيَـٰمَةِ ۗ وَلَن يَجْعَلَ ٱللَّهُ لِلْكَـٰفِرِينَ عَلَى ٱلْمُؤْمِنِينَ سَبِيلًا ﴿١٤١﴾

*(வேஷதாரிகளாகிய) இத்தகையோர். உங்களைப் பற்றி எதிர்பார்த்தவண்ணம் இருக்கின்றனர். அல்லாஹ்வி(ன் உதவியி)னால் உங்களுக்கு வெற்றி கிடைத்தால் “நாங்களும் உங்களுடன் இருக்கவில்லையா?” என்று கூறுகின்றனர். நிராகரிப்போருக்கு பங்கேதும் கிடைத்துவிட்டால் “நாங்கள் உங்களை வெற்றி கொள்ளக் கூடிய நிலையிலிருந்தும் விசுவாசங் கொண்ட அவர்களிடமிருந்து நாங்கள் உங்களைத் தடுக்கவில்லையா?” என்று கூறுகின்றனர். ஆகவே, உங்களுக்கிடையில் அல்லாஹ் மறுமைநாளில் தீர்ப்பளிப்பான். இன்னும் விசுவாசிகளுக்கு எதிராக அந்நிராகரிப்பவர்களுக்கு அல்லாஹ் யாதொரு வழியையும் ஆக்கவே மாட்டான். (அந்நிஸா:141)*

*(7) இறைநம்பிக்கையாளர்களை அவ்வப்பொழுது சந்தித்து வருவது அவர்களின் சந்திப்பை விரும்புவது. அவர்களோடு இணைந்திருப்பது.*

*ஹதீஸ் குத்ஸியில் அல்லாஹ் கூறுவதாக நபி (ஸல்) கூறுகிறார்கள், "எனக்காக சந்தித்து கொள்பவர்களுக்கு என்னுடைய நேசம் (அவர்கள் மீது) கடமையாகி விட்டது".*

*மேலும், நபி (ஸல்) கூறினார்கள்: ஒரு மனிதர் மற்றொரு ஊரில் உள்ள சகோதரரை சந்திக்கச் சென்றபோது அவரது பாதையில் அல்லாஹ் ஒரு வானவரை எதிர்பார்த்திருக்க வைத்தான். அம்மனிதர் அந்த வானவரைக் கடந்த போது அவர், "எங்கே செல்கிறாய்?" என்று கேட்டார். அவர் "இந்த ஊரிலுள்ள எனது சகோதரரை சந்திக்கச் ெல்கிறேன்" என்று கூறினார். அம்மலக்கு "அவர் உமக்கு ஏதேனும் உபகாரம் செய்ய வேண்டுமென்பதற்காகவா?" (செல்கிறாய்) என்று கேட்டார். அவர் "இல்லை, எனினும் நான் அல்லாஹ்வுக்காக அவரை நேசிக்கிறேன்" என்று கூறினார். "நான் அல்லாஹ்விடமிருந்து உம்மிடம் அனுப்பப் பட்ட தூதர், நீ அல்லாஹ்வுக்காக உமது சகோதரரை நேசித்தது போல நிச்சயமாக அல்லாஹ் உம்மை நேசிக்கிறான்" என்று அந்த மலக்கு கூறினார்.*

*(8) இறைநம்பிக்கையாளர்களுடைய உரிமைகளுக்கு மதிப்பளிக்க வேண்டும். மேலும் ஒருவரும் தனது சகோதரனுக்கு எதிராக வியாபாரம் செய்ய வேண்டாம். தனது சகோதரனுக்கு எதிராக விலையை நிர்ணயித் திட வேண்டாம். அவர்களுக்கு முந்திய விஷயங்களில் நீங்கள் குறிக்கிட வேண்டாம்.*

*நபி (ஸல்) கூறினார்கள்: "ஒருவர் தனது சகோதரனுக்கு எதிராக வியாபாரம் செய்ய வேண்டாம். ஒருவரின் திருமணப் பேச்சிற்கு எதிராக திருமணம் பேச வேண்டாம். தனது சகோதரனுக்கு எதிராக விலையை நிர்ணயிக்க வேண்டாம்".*

*(9) அவர்களில் பலவீனமானவர்களின் மீது மென்மையாக நடந்து கொள்வது.*

*நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள், நம்மில் பெரியவர்களை கண்ணி யப்படுத்தாதவனும், நம்மில் சிறியவர்கள் மீது இரக்கம் காட்டாதவனும் நம்மைச் சார்ந்தவர் அல்ல.*

*மேலும், நபி (ஸல்) கூறினார்கள், உங்களுக்கு உதவி வழங்கப்படுவ தும், வாழ் வாதாரம் கொடுக்கப்படுவது உங்களில் உள்ள பலவீனமான வர்களை கொண்டுதான்.*

*அல்லாஹ் கூறுகிறான்:*

وَاصْبِرْ نَفْسَكَ مَعَ الَّذِينَ يَدْعُونَ رَبَّهُم بِالْغَدَاةِ وَالْعَشِيِّ يُرِيدُونَ وَجْهَهُ ۖ وَلَا تَعْدُ عَيْنَاكَ عَنْهُمْ تُرِيدُ
زِينَةَ الْحَيَاةِ الدُّنْيَا ۖ وَلَا تُطِعْ مَنْ أَغْفَلْنَا قَلْبَهُ عَن ذِكْرِنَا وَاتَّبَعَ هَوَاهُ وَكَانَ أَمْرُهُ فُرُطًا ﴿٢٨﴾

*(நபியே!) தங்கள் இரட்சகனைக் காலையிலும் மாலையிலும் அழைத்துக் கொண்டு அவனுடைய (மேன்மையான) முகத்தையும் நாடுகின்றார்களே அத்தகையோருடன் உம்மை நீரும் (ஆக்கிக்) கட்டுப்படுத்திக் கொள்வீராக! இவ்வுலக வாழ்வின் அலங்காரத்தை நீர் நாடி அத்தகைய (நல்ல)வர்களை விட்டு கண்களை திருப்பியும் விடாதீர். மேலும், எவனுடைய இதயத்தை நம்மை நினைவுகூர்வதிலிருந்து நாம் மறக்கச் செய்து தன் மனோ இச்சைகயைப் பின்பற்றிவிட்டானோ அவனுக்கும் நீர் கீழ்ப்படியாதீர்; அவனுடைய காரியமும் எல்லை கடந்தாகிவிட்டது. (அல்கஹ்ஃப்:28)*

*(10)* இறைநம்பிக்கையாளர்களுக்காக பிரார்த்தனை புரிவதும் பாவமன்னிப்புத் தேடுவதும்.

*அல்லாஹ் கூறுகின்றான்:* وَٱسْتَغْفِرْ لِذَنۢبِكَ وَلِلْمُؤْمِنِينَ وَٱلْمُؤْمِنَٰتِ ۗ

*(நபியே!) உம்முடைய பாவத்திற்காகவும் விசுவாசங் கொண்ட ஆண்களுக்காகவும் விசுவாசங்கொண்ட பெண்களுக்காகவும் பாவமன்னிப்புக் கோருவீராக. (முஹம்மது:19)*

*அல்லாஹ் கூறுகின்றான்:*

وَٱلَّذِينَ جَآءُو مِنۢ بَعْدِهِمْ يَقُولُونَ رَبَّنَا ٱغْفِرْ لَنَا وَلِإِخْوَٰنِنَا ٱلَّذِينَ سَبَقُونَا بِٱلْإِيمَٰنِ وَلَا تَجْعَلْ
فِى قُلُوبِنَا غِلًّا لِّلَّذِينَ ءَامَنُوا۟ رَبَّنَآ إِنَّكَ رَءُوفٌ رَّحِيمٌ ﴿١٠﴾

*மேலும், அவர்களுக்குப் பின் வந்தார்களே அத்தகையவர்கள், “எங்கள் இரட்சகனே! எங்களையும் விசுவாசம் கொள்வதில் எங்களை முந்திவிட்டார்களே அத்தகைய எங்களுடைய சகோதரர்களையும் நீ மன்னித்தருள்வாயாக! விசுவாசங்கொண்டவர்களைப் பற்றி எங்களுடைய இதயங்களில் வெறுப்பை ஏற்படுத்தாதிருப்பாயாக! எங்கள் இரட்சகனே! நிச்சயமாக நீ மிக்க இரக்கமுடையவன், மிகக் கருணையுடையவன்” என்று (பிரார்த்தனை செய்தும்) கூறுவார்கள். (அல்ஹஷ்ர்:10)*

*கவனிக்க:*

لَّا يَنْهَىٰكُمُ ٱللَّهُ عَنِ ٱلَّذِينَ لَمْ يُقَٰتِلُوكُمْ فِى ٱلدِّينِ وَلَمْ يُخْرِجُوكُم مِّن دِيَٰرِكُمْ أَن تَبَرُّوهُمْ وَتُقْسِطُوٓا۟ إِلَيْهِمْ ۚ إِنَّ ٱللَّهَ يُحِبُّ ٱلْمُقْسِطِينَ ﴿٨﴾

*(விசுவாசிகளே!) மார்க்க (விஷய)த்தில் உங்களுடன் எதிர்த் துப் போரிடாமலும், உங்கள் இல்லங்களிலிருந்து உங்களை வெளியேற்றாமலும் இருந்தார்களே, அத்தகையோருக்கு நீங்கள் நன்மை செய்வதையும் அவர்கள்பால் நீங்கள் நீதமாக நடந்து கொள்வதையும் அல்லாஹ் உங்களுக்கு தடுக்கவில்லை. நிச்சயமாக அல்லாஹ் நீதி செய்வோரை நேசிக்கிறான். (அல்மும்தஹினா:8)*

*இறைநிராகரிப்பாளர்களில் யார் முஸ்லிம்களோடு போர் செய்யவில்லையோ; மேலும் அவர்களுடைய இல்லங்களிலிருந்து அவர்களை வெளியேற்றவில்லையோ அவர்களோடு நல்லமுறையில் நீதியோடு*

உலக காரியங்களில் நடந்து கொள்வதில் எந்து தவரும் இல்லை.

அல்லாஹ் தனது திருமறையில் பெற்றோர் விஷயத்தில் கூறுகின்ற பொழுது:

وَإِن جَٰهَدَاكَ عَلَىٰٓ أَن تُشۡرِكَ بِي مَا لَيۡسَ لَكَ بِهِۦ عِلۡمٞ فَلَا تُطِعۡهُمَاۖ وَصَاحِبۡهُمَا فِي ٱلدُّنۡيَا مَعۡرُوفٗاۖ وَٱتَّبِعۡ سَبِيلَ مَنۡ
أَنَابَ إِلَيَّۚ ثُمَّ إِلَيَّ مَرۡجِعُكُمۡ فَأُنَبِّئُكُم بِمَا كُنتُمۡ تَعۡمَلُونَ ١٥

எது பற்றி உனக்கு அறிவு (ஆதாரம்) இல்லையோ அதை எனக்கு நீ இணையாக்குமாறு உன்னை அவ்விருவரும் வற்புறுத்தினால் (அவ்வி ஷயத்தில்) நீ அவ்விருவருக்கும் கீழ்ப்படிய வேண்டாம்; ஆயினும் இவ்வுலகத்தில் நன்மையான காரியத்தில் நீ அவ்விருவருடனும் (அன்பு டன் ஒத்து) உடனிருப்பாயாக. இன்னும் (வழிபாட்டில்) என்பால் திரும்பியவரின் வழியை நீ பின்பற்றுவாயாக; பின்னர் நீங்கள் (யாவரும்) என்னிடமே திரும்பி வந்து சேர வேண்டியதிருக்கின்றது. அப்போது நீங்கள் செய்து கொண்டிருந்தவைகளைப் பற்றி நான் உங்களுக்கு அறிவிப்பேன். (லுக்மான்:15)

உம்மு அஸ்மா (ரழி) அவர்களுடைய தாய் இறைநிராகரிப்பாளராக இருந்தபொழுது உம்மு அஸ்மா (ரழி) அவர்களிடம் வந்து ‘தன்னுடன் சேர்ந்து வாழும்படி’ கேட்டுக் கொண்டனர். உம்மு அஸ்மா (ரழி) இவ்விஷயத்தை நபி (ஸல்) அவர்களிடம் கூறி அனுமதி கேட்ட பொழுது, நபி (ஸல்) அவர்கள் ‘அனுமதியளித்தார்கள்’.

அல்லாஹ் கூறுகின்றான்:

لَّا تَجِدُ قَوۡمٗا يُؤۡمِنُونَ بِٱللَّهِ وَٱلۡيَوۡمِ ٱلۡأٓخِرِ يُوَآدُّونَ مَنۡ حَآدَّ ٱللَّهَ وَرَسُولَهُۥ وَلَوۡ كَانُوٓاْ ءَابَآءَهُمۡ أَوۡ أَبۡنَآءَهُمۡ
أَوۡ إِخۡوَٰنَهُمۡ أَوۡ عَشِيرَتَهُمۡۚ أُوْلَٰٓئِكَ كَتَبَ فِي قُلُوبِهِمُ ٱلۡإِيمَٰنَ وَأَيَّدَهُم بِرُوحٖ مِّنۡهُۖ وَيُدۡخِلُهُمۡ جَنَّٰتٖ تَجۡرِي مِن
تَحۡتِهَا ٱلۡأَنۡهَٰرُ خَٰلِدِينَ فِيهَاۚ رَضِيَ ٱللَّهُ عَنۡهُمۡ وَرَضُواْ عَنۡهُۚ أُوْلَٰٓئِكَ حِزۡبُ ٱللَّهِۚ أَلَآ إِنَّ حِزۡبَ ٱللَّهِ هُمُ ٱلۡمُفۡلِحُونَ ٢٢

அல்லாஹ்வையும் இறுதி நாளையும் விசுவாசங் கொண்ட சமூகத்தினரை அல்லாஹ்வையும் அவனது தூதரையும் பகைத்துக் கொண்டிருக்கிறார்களே அவர்களை நேசிப்பவர்களாக (நபியே!) நீ ர் காணமாட்டீர்; அவர்கள் தங்களின் பெற்றோர்களாயினும் அல்லது தங்களின் ஆண்மக்களாயினும் அல்லது தங்களின் சகோதரர்க ளாயினும் அல்லது தங்களின் குடும்பத்தவராயினும் சரியே. (காரணம்) அத்தகையோர் அவர்களின் இதயங்களில் ஈமானை (விசுவாசத்தை அல்லாஹ்வாகிய) அவன் எழுதிவிட்டான்; மேலும் தன்னிடமிருந்து (வெற்றி எனும்) ரூஹைக் கொண்டு அவர்களைப் பலப்படுத்தியிருக் கிறான். இன்னும் அவர்களைச் சுவனங்களில் நுழையச் செய்வான்; அவற்றின் கீழ் ஆறுகள் ஓடிக்கொண்டிருக்கும். அவற்றில் அவர்கள் நிரந்தரமாக (த் தங்கி) இருப்பார்கள். அல்லாஹ் அவர்களைப் பொருந்திக் கொண்டான், அவனை அவர்களும் பொருந்திக் கொண் டார்கள். அவர்கள்தாம் அல்லாஹ்வின் கூட்டத்தினர்; அறிந்து

*கொள்வீராக! நிச்சயமாக அல்லாஹ்வின் கூட்டத்தினர்;அவர்கள்தாம் வெற்றியாளர்கள். (அல்ஹஸ்ர்:22)*

*உலக விஷயத்தில் நல்ல முறையில் நடந்து கொள்வது வேறு; உள ரீதியாக அன்பு செலுத்துவது என்பது வேறு. உலக விவகாரங்களில் அவர்களை மார்க்கத்தின்பால் ஈர்ப்பை ஏற்படுத்தக் கூடிய ஒரு செயலாக இருக்கும். இவை அழைப்புப் பணியின் (தஃவா) வழிமுறை. மேலும் அவர்களுடன் உளரீதியாக அன்பு செலுத்துவதும் நேசம் கொள்வதும் இவை இரண்டும், அவர்களின் (குஃப்ரை) இறைநிரகாரிப்பை பொருந் திக் கொண்டதாகவும் ஏற்றுக் கொண்டதாகவும் ஆகும். அழைப்புப்பணி இல்லாமல் போவதற்கு இவை காரணமாக அமையும்.*

*அதே போல அவர்களுடன் நேசம் கொள்வது ஹராமாகும். மாறாக அவர்களுடன் வியாபார நடவடிக்கை மேற்கொள்வதும் மற்றும் பயனுள்ள பொருட்களை இறக்குமதி செய்வதும் மேலும் அவர்கள் கண்டுபிடித்தவற்றிலிருந்து பயன்பெறுவதும் ஆகுமானது. நபி (ஸல்) அவர்கள்மதீனாசெல்வதற்கு ‘இப்னுஅர்கா’ என்றஇணைவைப்பாளரை வழி காண்பிப்பதற்காக கூலிக்கு அமர்த்தினார்கள். யூதர்களிடம் கடன் பரிமாற்றம் செய்துமிருக்கிறார்கள். தொடர்ச்சியாக முஸ்லிம்கள் இணைவைப்பாளர்களிடமிருந்து பொருட்களை இறக்குமதி செய்தி ருக்கிறார்கள். அதை உலமாக்கள் நிராகரிக்கவுமில்லை. இது வியாபாரம் சம்மந்தமானது அவர்களுக்கு அவர்களுடைய கூலி இதில் அவர்களுக்கு நம்மீது எந்த ஒரு சிறப்பும், அருளும் இல்லை மேலும் இது உளரீதியாக அன்பு செலுத்துவதுமில்லை.*

*நிச்சயமாக அல்லாஹ் இணைவைப்பாளர்களுடன் பகைமை கொள்வதையும் குரோதம் கொள்வதையும் மேலும் இறைநம்பிக்கை யாளர்களுடன் நேசம் கொள்வதையும் அன்பு செலுத்துவதையும் கடமையாக்கியிருக்கின்றான்.*

*அல்லாஹ் கூறுகின்றான்:*

إِنَّ ٱلَّذِينَ ءَامَنُواْ وَهَاجَرُواْ وَجَٰهَدُواْ بِأَمۡوَٰلِهِمۡ وَأَنفُسِهِمۡ فِي سَبِيلِ ٱللَّهِ وَٱلَّذِينَ ءَاوَواْ وَّنَصَرُوٓاْ أُوْلَٰٓئِكَ بَعۡضُهُمۡ أَوۡلِيَآءُ بَعۡضٖۚ
وَٱلَّذِينَ ءَامَنُواْ وَلَمۡ يُهَاجِرُواْ مَا لَكُم مِّن وَلَٰيَتِهِم مِّن شَيۡءٍ حَتَّىٰ يُهَاجِرُواْۚ وَإِنِ ٱسۡتَنصَرُوكُمۡ فِي ٱلدِّينِ فَعَلَيۡكُمُ ٱلنَّصۡرُ إِلَّا عَلَىٰ قَوۡمِۭ
بَيۡنَكُمۡ وَبَيۡنَهُم مِّيثَٰقٞۗ وَٱللَّهُ بِمَا تَعۡمَلُونَ بَصِيرٞ ٧٢

*நிச்சயமாக விசுவாசங் கொண்டு, (தங்கள்) ஊரைவிட்டும் வெளியேறி அல்லாஹ்வுடைய பாதையில் தங்கள் செல்வங்களாலும், தங்கள் உயிர்களாலும் அறப்போர் புரிந்தார்களே அத்தகையோரும்; அவர்களுக்கு (த் தங்கள் வீடுகளில்) இடமளித்து (வைத்துக் கொண்டு) உதவியும் புரிந்தார்களோ அத்தகையோருமாகிய இவர்கள், இவர்களில் சிலர் சிலருக்கு உற்ற நண்பர்களாவார்கள், இன்னும் விசுவாசங் கொண்டு, (தங்களுடைய) ஊரைவிட்டு (ஹிஜ்ரத் செய்து)*

புறப்படாமலிருக்கின்றனரே அத்தகையவர்கள்-அவர்கள் (தங்களுடைய) ஊரை விட்டுப் புறப்படும் (ஹிஜ்ரத் செய்யும்) வரையில் அவர்களுடைய நட்பில் உங்களுக்கு எதுவும் இல்லை. (எனினும்) அவர்கள் மார்க்க விஷயத்தில் உங்களிடம் உதவி தேடினாலோ (அவர்களுக்கு) உதவி செய்வது உங்கள் மீது கடமையாகும்; (ஆயினும் வேறொரு சமூகத்தாராகிய) அவர்களுக்கும் உங்களுக்குமிடையில் உடன்படிக்கை உள்ள (தோ அந்த) சமூகத்தாரைத் தவிர, (அவர்களுக்கு) விரோதமாக உதவி செய்வது கூடாது. மேலும் அல்லாஹ் நீங்கள் செய்பவைகளை பார்க்கிறான். (அல் அன்ஃபால்:72)

وَٱلَّذِينَ كَفَرُواْ بَعْضُهُمْ أَوْلِيَآءُ بَعْضٍۚ إِلَّا تَفْعَلُوهُ تَكُن فِتْنَةٌ فِى ٱلْأَرْضِ وَفَسَادٌ كَبِيرٌ ﴿٧٣﴾

மேலும், நிராகரித்துக் கொண்டிருப்பவர்கள்; அவர்களில் சிலர் சிலருக்கு பாதுகாவலர்களாவர் (இணைவைப்பவர்களைத் தவிர்த்து விசுவாசிகளை நீங்கள் உங்களின் காரியஸ்தர்களாக ஆக்கிக் கொள்ளும்) இதை நீங்கள் செய்யாவிட்டால் பூமியில் குழப்பமும் பெருங்கலகமும் ஏற்பட்டுவிடும். (அல்அன்ஃபால்:73)

இமாம் இப்னு கஸீர் (ரஹ்) மேலே உள்ள அல் அன்ஃபாலின் 75 வது வசனத்திற்கு விளக்கம் கூறுகையில்,

“நீங்கள் இணைவைப்பாளர்களை விட்டு தூரமாகவில்லையென்றால், இறைநம்பிக்கையாளர்களுடன் சேர்ந்து வாழவில்லையென்றால் மக்கள் மத்தியில் குழப்பம் ஏற்பட்டுவிடும். இது விஷயம் நன்றாக கலந்தும் விட்டனர். இறை நம்பிக்கையாளர்களும் இறைநிராகரிப்பாளர்களும் ஒன்றாக கலந்து வாழ்ந்தால் மக்கள் மத்தியில் குழப்பம் ஏற்பட்டு அது பரவிவிடும்”.

இமாம் ஸாலிஹ் அல் பவ்ஸான் கூறினார்கள்: “ஆம், இதுதான் இந்த காலத்தில் நடந்துள்ளது”.

### ‘வலா அல்பரா’வில் மக்கள் மீதுள்ள உரிமைகள் அவற்றில் உள்ள மக்களின் வகைகள்

**வலா அல்பராவில் மூன்று வகையினர் உள்ளனர்:**

***முதலானவர்கள்:***

எந்த ஒரு எதிர்ப்பும் காட்டாமல் அவர்கள் உளரீதியாக உண்மையாக நேசிக்கப்பட கூடியவர்கள். அவர்கள் நபிமார்கள், உண்மையாளர்கள், உயிர்த்தியாகிகள், நல்லடியார்கள். இவர்கள் அனைவரிலும் முன்னதாக எம்பெருமானார் முஹம்மது (ஸல்) அவர்கள். நிச்சயமாக நம் உயிரையும் பெற்றோர்கள் பிள்ளைகள் மற்றும் உலக மக்கள் அனைவரை விடவும் அவரை நேசிப்பது நம்மீது கடமையாகும். மேலும் நபித்தோழர்கள் குறிப்பாக நேர்வழி பெற்ற கலீஃபாக்கள், சுவனத்தைக் கொண்டு நற்செய்தி சொல்லப்பட்ட நபித்தோழர்கள்,

முஃமீன்களுடைய அன்னையர்கள். நபி (ஸல்) அவர்களின் குடும்பத்தார்கள், முஹாஜிரீன்கள், அன்ஸார்கள் பத்ர்வாசிகள், அல்லாஹ்வால் பொருந்திக் கொண்ட ஒப்பந்தத்திற்கு சொந்தக்காரர்கள் மற்றும் மீதமுள்ள நபித்தோழர்கள், தாபியீன்கள் மற்றும் சிறந்த மூன்று நூற்றாண்டில் உள்ளவர்கள், கடந்து போனவர்களான உலமாக்கள் உம்மத்தின் நான்கு பெரும் இமாம்களைப் போல.

அல்லாஹ் கூறுகின்றான்:

وَٱلَّذِينَ جَآءُو مِنۢ بَعۡدِهِمۡ يَقُولُونَ رَبَّنَا ٱغۡفِرۡ لَنَا وَلِإِخۡوَٰنِنَا ٱلَّذِينَ سَبَقُونَا بِٱلۡإِيمَٰنِ
وَلَا تَجۡعَلۡ فِي قُلُوبِنَا غِلّٗا لِّلَّذِينَ ءَامَنُواْ رَبَّنَآ إِنَّكَ رَءُوفٞ رَّحِيمٌ ١٠

மேலும், அவர்களுக்குப் பின் வந்தார்களே அத்தகையவர்கள் ‘எங்கள் இரட்சகனே! எங்களையும் விசுவாசம் கொள்வதில் எங்களை முந்தி விட்டார்களே அத்தகைய எங்களுடைய சகோதரர்களையும் நீ மன்னித்தருள்வாயாக! விசுவாசங் கொண்டவர்களைப் பற்றி எங்களுடைய இதயங்களில் வெறுப்பை ஏற்படுத்தாதிருப்பாயாக! எங்கள் இரட்சகனே! நிச்சயமாக நீ மிக்க இரக்கமுடையவன் மிகக் கருணையுடையவன்’ என்று (பிரார்த்தனை செய்தும்) கூறுவார்கள். (அல்ஹஷ்ர்:10)

நபித்தோழர்கள் மற்றும் கடந்து போன நல்லடியார்கள் இவர்களைப் பற்றி உள்ளத்தில் இறைநம்பிக்கையுள்ளவர்கள் குரோதம் கொள்ள மாட்டார்கள். மாறாக, கோணல் புத்தியுள்ளவர்கள் நயவஞ்சகத் தன்மை உள்ளவர்கள் மற்றும் இஸ்லாத்தினுடைய எதிரிகள்தாம் குரோதம் கொள்வார்கள். ‘ராஃபிழா’க்களைப் போல. (அல்லாஹ் நம்மை அந்நிலையிலிருந்து பாதுகாப்பானாக)

**இரண்டாமவர்கள்:**

எந்த வித அன்பும் இல்லாமல் முழுமையாக எதிர்ப்பும், குரோதமும் காட்டபட வேண்டியவர்கள். இவர்கள் இறைநிராகரிப்பாளர்கள், இணைவைப்பாளர்கள், நயவஞ்சகர்கள், இஸ்லாமிய மார்க்கத்தை விட்டும் வெளியேறியவர்கள், நாத்திகர்கள்.

அல்லாஹ் கூறுகிறான்:

لَّا تَجِدُ قَوۡمٗا يُؤۡمِنُونَ بِٱللَّهِ وَٱلۡيَوۡمِ ٱلۡأٓخِرِ يُوَآدُّونَ مَنۡ حَآدَّ ٱللَّهَ وَرَسُولَهُۥ وَلَوۡ كَانُوٓاْ ءَابَآءَهُمۡ أَوۡ أَبۡنَآءَهُمۡ
أَوۡ إِخۡوَٰنَهُمۡ أَوۡ عَشِيرَتَهُمۡۚ أُوْلَٰٓئِكَ كَتَبَ فِي قُلُوبِهِمُ ٱلۡإِيمَٰنَ وَأَيَّدَهُم بِرُوحٖ مِّنۡهُۖ وَيُدۡخِلُهُمۡ جَنَّٰتٖ تَجۡرِي مِن
تَحۡتِهَا ٱلۡأَنۡهَٰرُ خَٰلِدِينَ فِيهَاۚ رَضِيَ ٱللَّهُ عَنۡهُمۡ وَرَضُواْ عَنۡهُۚ أُوْلَٰٓئِكَ حِزۡبُ ٱللَّهِۚ أَلَآ إِنَّ حِزۡبَ ٱللَّهِ هُمُ ٱلۡمُفۡلِحُونَ ٢٢

அல்லாஹ்வையும் இறுதிநாளையும் விசுவாசங் கொண்ட சமூ கத்தினரை அல்லாஹ்வையும் அவனது தூதரையும் பகைத்துக் கொண்டிருக்கிறார்களே அவர்களை நேசிப்பவர்களாக (நபியே!) நீர் காணமாட்டீர்; அவர்கள் தங்களின் பெற்றோர்களாயினும் அல்லது தங் களின் ஆண்மக்களாயினும் அல்லது தங்களின் சகோதரர்களாயினும்

அல்லது தங்கள் குடும்பத்தவராயினும் சரியே. (காரணம்) அத்தகையோர், அவர்களின் இதயங்களில் ஈமானை (விசுவாசத்தை அல்லாஹ்வாகிய) அவன் எழுதிவிட்டான்; மேலும் தன்னிடமிருந்து (வெற்றி எனும்) ரூஹைக் கொண்டு அவர்களைப் பலப்படுத்தியிருக்கிறான். இன்னும் அவர்களைச் சுவனங்களில் நுழையச் செய்வான் அவற்றின் கீழ் ஆறுகள் ஓடிக் கொண்டிருக்கும் அவற்றில் அவர்கள் நிரந்தரமாக (தங்கி) இருப் பவர்கள். அல்லாஹ் அவர்களை பொருந்திக் கொண்டான் அவனை அவர்களும் பொருந்திக் கொண்டார்கள். அவர்கள்தான் அல்லாஹ்வின் கூட்டத்தினர்; அறிந்து கொள்வீராக! நிச்சயமாக அல்லாஹ்வின் கூட்டத்தினர்; அவர்கள்தாம் வெற்றியாளர்கள். *(அல் முஜாதிலா:22)*

மேலும், அல்லாஹ் பனீ இஸ்ராயீலர்களைப் பற்றி கூறும் பொழுது,

تَرَىٰ كَثِيرًا مِّنْهُمْ يَتَوَلَّوْنَ الَّذِينَ كَفَرُوا ۚ لَبِئْسَ مَا قَدَّمَتْ لَهُمْ أَنفُسُهُمْ أَن سَخِطَ اللَّهُ عَلَيْهِمْ وَفِي الْعَذَابِ هُمْ
خَالِدُونَ ﴿٨٠﴾ وَلَوْ كَانُوا يُؤْمِنُونَ بِاللَّهِ وَالنَّبِيِّ وَمَا أُنزِلَ إِلَيْهِ مَا اتَّخَذُوهُمْ أَوْلِيَاءَ وَلَٰكِنَّ كَثِيرًا مِّنْهُمْ فَاسِقُونَ ﴿٨١﴾

நிராகரித்து விட்டார்களே அத்தகையோரை உற்ற நண்பர்களாக ஆக்கிக் கொள்வோராக அவர்களில் அநேகரை (நபியே!) நீர் காண்பீர்! அல்லாஹ் அவர்கள் மீது கோபம் கொள்ளுமாறு தங்களுக்காக அவர்கள் முற்படுத்தி வைத்திட்ட (செயலான)து மிக கெட்டதாகி விட்டது; இன் னும் (நரக) வேதனையில் அவர்கள் நிரந்தரமாக (த் தங்கி) இருப்பவர்கள்.

மேலும், அவர்கள் அல்லாஹ்வையும் இந்த நபியையும் அவருக்கு இறக்கி வைக்கப்பட்ட (வேதத்)தையும் (உண்மையாகவே) விசுவாசங் கொள்பவர்களாக இருந்திருப்பார்களானால் (நிராகரித்த) அவர்களை (த் தங்களுக்கு) உற்ற நண்பர்களாக எடுத்துக் கொண்டிருக்க மாட் டார்கள் எனினும் அவர்களில் பெரும்பாலோரு பாவிகளாவர். *(அல்மாயிதா:80,81)*

**மூன்றாமவர்கள்:**

ஒரு வழியில் அவர்களை விரும்பவும் மற்றொரு வழியில் அவர்களை வெறுக்கவும் வேண்டும். இந்த இடத்தில் வெறுப்பையும், நேசத்தையும் சேர்க்க வேண்டும். அவர்கள் முஃமீன்களில் உள்ள பாவிகள், பாவம் செய்யக் கூடியவர்கள். அவர்களில் உள்ள இறைநம்பிக்கைக்காக நேசம் கொள்ள வேண்டும்; இணைவைப்பு இறைநிராகரிப்பு இல்லாமல் பித்அத் மற்றும் பாவங்கள் இருக்கும் பட்சத்தில் அவர்களை வெறுக்க வேண்டும்.

அவர்கள் மேலுள்ள அந்த விருப்பத்தின்பால் அவர்களுக்கு அந்த பாவங்களை விட்டும் பித்அத்துகளை விட்டும் வெளியேற உபதேசம் செய்ய வேண்டும். அவர்களுடைய பாவங்களை பார்த்துக்கொண்டு அமைதியாக இருப்பது கூடாது. மாறாக, அதை நிராகரிக்க வேண்டும். நன்மையை ஏவி தீமையை தடுக்க வேண்டும். அவர்கள் மீது

ஆதாரங்களையும் எல்லைகளையும் நிலை நிறுத்த வேண்டும். எதுவரையென்றால் அவர்கள் அவர்களுடைய பாவங்களிலிருந்து விலகி பாவமன்னிப்பு தேடும் வரை அவர்கள் மீது முழுமையான குரோதம் கொண்டு அவர்களை விட்டு விலகியிருப்பது கூடாது. 'கவாரிஜ்' களைப் போல அவர்களில் ஒருவர் இணைவைப்பத் தவிர பெரும்பாவங்களில் ஒன்றை செய்துவிட்டால் அவனை விரும்பமாட்டார்கள் நேசம் கொள்ள மாட்டார்கள்; ஆனால் 'முஅத்தஸிலா' பாவங்களை சுட்டிக் காட்ட மாட்டார்கள்; ஆனால் 'அஹ்லுஸ் சுன்னா வல் ஜமாஅத்'துடைய வழி முறையே சிறந்ததும் நடுநிலையானதுமாகும்.

நபி (ஸல்) கூறினார்கள், யார் அல்லாஹ்விற்காக நேசித்தாரோ, யார் அல்லாஹ்விற்காக வெறுத்தாரோ, யார் அல்லாஹ்விற்காக கொடுத்தாரோ, யார் அல்லாஹ்விற்காக (கொடுக்காமல்) தடுத்துக் கொண்டாரோ அவர் ஈமானை பரிபூரணமாக்கிக் கொண்டார். (அபூதாவுத்)

"ஒரு மனிதன் தான் விரும்பியவர்களோடு மறுமைநாளில் இருப்பான்".

ஆனால், இன்றைய காலத்தில் இதுவெல்லாம் மாறிவிட்டது. இந்த உலகாயாத நோக்கங்களுக்காக யாரிடம் தன் தேவைகள் உள்ளதோ அவர்களுடன் நேசம் கொள்வார்கள்; அவர்கள் அல்லாஹ்வுடைய அவனுடைய தூதரின் எதிரிகளாக இருந்தாலும் சரியே.

யாரிடம் உலக லாபங்கள் இல்லையோ அவர்களிடம் பகைமை காட்டுவார்கள், இழிவாக கருதுவார்கள்; அவர்கள் அல்லாஹ்வுடைய மற்றும் அவனின் தூதருடைய நேசராக இருப்பினும் சரியே.

இப்னு அப்பாஸ் (ரழி),

யார் அல்லாஹ்விற்காக விரும்புகிறாரோ யார் அல்லாஹ்விற்காக வெறுக்கிறாரோ; யார் அல்லாஹ்விற்காக நேசம் கொள்கிறாரோ யார் அல்லாஹ்விற்காக பகைமை கொள்கிறாரோ. அவர் இதன் காரணமாக அல்லாஹ்வுடைய நேசத்தை பெற்றுவிட்டார். ஆனால் மக்கள் அனைவரும் உலக விஷயத்திற்காக சகோதரர்களாக மாறிவிட்டார்கள். இதனைக் கொண்டு அவர்கள் அவர்களுடைய குடும்பத்திற்காக எந்த ஒரு பலனையும் பெறவில்லை.

நபி (ஸல்) அவர்கள் கூறியதாக அபூஹுரைரா (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள், "என் நேசத்திற்குரியவரை யார் பகைக்கிறாரோ அவருக்கு எதிராக நான் போரை அறிவித்து விட்டேன்".

அல்லாஹ்வுடன் போர் செய்யத் துனிந்தவன் யார்? யார், நபி (ஸல்) அவர்களின் தோழர்களை திட்டுகிறார்களோ குறைகூறுகிறார்களோ அவர்கள்தான்.

நபி (ஸல்) கூறினார்கள்: "என்னுடைய தோழர்கள் விஷயத்தில்

*அல்லாஹ்வை பயந்துகொள்ளுங்கள். என்னுடைய தோழர்களை கேளிக்கையாக்காதீர்கள். யார் அவர்களை நோவினைப்படுத்தினாரோ அவர் என்னை நோவினைப் படுத்தியவராவர்; எவர் என்னை நோவினைப் படுத்தினாரோ அவர் அல்லாஹ்வை நோவினை செய்தவராவர். அல்லாஹ் அவனை பிடிப்பதற்கு நெருங்கி விட்டான்.*

*ஆனால் இன்று சில இயக்கங்களின் மார்க்கமாகவும் அவர்களின் கொள்கையாகவும் நபித்தோழர்களைத் திட்டுவது மாறிவிட்டது.*

*அல்லாஹ் அவனுடைய தன்டனையிலிருந்தும் கோபத்திலிருந்தும் நம்மைப் பாதுகாப்பானாக!*

*யா அல்லாஹ்! எங்களை மன்னிப்பாயாக! மேலும், ஆரோக்கியத்தை அளிப்பாயாக!*

----------------------

### புதிதாக உருவாக்கும் விடயத்திலிருந்து (பித்அத்) ஓர் எச்சரிக்கை

*முதலாவதாக பித்அத்தின் வரைவிலக்கணமும் மேலும் அதனுடைய விளக்கங்களும் சட்டங்களும்:*

**பித்அத் என்றால் என்ன?**

*அரபு மொழியில் பித்அத் (بدعة)என்றால், புதிதான விஷயத்திலிருந்து எடுக்கப்பட்டது. அதாவது, எந்த ஒரு முன் உதாரணம் இன்றி உருவாக்குவது.*

*அல்லாஹ் தஆலா கூறுவதை பாருங்கள் :* بَدِيعُ ٱلسَّمَٰوَٰتِ وَٱلْأَرْضِ ۖ

*“வானங்கள் மற்றும் பூமியை முன் மாதிரியின்றி அவன் படைக்கின்றான்”. (அல்பகரா:117)*

*அதாவது, வானங்களையும் பூமியையும் அவன்தான் படைத்தான். அதுவும் அதற்கு எந்த ஒரு முன் உதாரணம் இன்றி படைத்தான்.*

*மேலும், அல்லாஹ் கூறுகிறான்:* قُلْ مَا كُنتُ بِدْعًا مِّنَ ٱلرُّسُلِ

*(நபியே! அவர்களிடம்) நீர் கூறுவீராக, (அல்லாஹ் அனுப்பிய) தூதர்களில் நான் புதியவனாக இருக்கவில்லை.*

*அதாவது நான் அல்லாஹ்விடம் இருந்து உங்கள்பால் வந்த முதல் தூதராக இருக்கவில்லை. மாறாக எனக்கு முன் எத்தனையோ தூதர்கள் கடந்து சென்றுள்ளனர்.*

*ஒரு மனிதன் பித்அத் செய்து விட்டான் என்றால், இல்லாத ஒரு புதிய விடயத்தை உருவாக்கிவிட்டான் என்று பொருள்.*

**பித்அத்கள் இரண்டு வகைகளாக பிரிக்கலாம்:**

*(1) நம்முடைய உலக வாழ்க்கையில் புதிதாக உருவாக்கும் விடயங்கள்.*

*நமது அன்றாட பயன்களுக்காக புதிய பல கண்டுபிடிப்புகளை உருவாக்குவது. இது ஆகுமானது.*

*(2) மார்க்கத்தில் புதிதாக உருவாக்கும் விடயங்கள். இவை 'ஹராம்' தடுக்கப்பட்டவை ஏனென்றால், மார்க்கம் பரிபூரணப்படுத்தப்பட்டு விட்டது.*

*நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:*

*"யார் நம்முடைய விடயத்தில் புதிதாக ஒன்றை உருவாக்குகிறாரோ அது மறுக்கப்பட கூடியது".*

*மேலும், நபி (ஸல்) அவர்கள் மற்றொரு அறிவிப்பில் கூறினார்கள்,*

*யார் நம்முடைய விஷயம் அல்லாத புதிய விஷயத்தை செய்கிறாரோ அது திருப்பப்படும்.*

### பித்அத்தின் வகைகள்:

*மார்க்க விஷயத்தில் பித்அத் இரண்டு வகைப்படும்.*

**முதலாவது வகை:**

*பித்அத் ஆன கொள்கைகள் உள்ளடங்கிய பேச்சுகள். ஜஹ்மிய்ய, முஅதஸிலா, ராபிதா மேலும் இது போல் மற்ற அனைத்து வழிகெட்ட கூட்டங்களுடைய பேச்சுக்களை போல.*

**இரண்டாவது வகை:**

*வணக்க வழிபாடுகளில் உள்ள பித்அத்துகள். இவை பல வகைகள் உள்ளன.*

*(1) மார்க்கம் வரையறுக்காத ஒரு விஷயத்தை, அல்லாஹ்வும் அவனுடைய தூதரும் காட்டித்தராத விஷயத்தை உருவாக்கி அதனை வணக்க வழிபாடுகளாக நிறைவேற்றுவது. அல்லாஹ்வும் அல்லாஹ்வுடைய தூதரும் காட்டித்தராத தொழுகைகள், நோன்புகள், பெருநாட்கள், நபி (ஸல்) அவர்களின் பிறந்தநாள் இவைகளை கொண்டாடுவது.*

*(2) மார்க்கம் வரையறுத்த விஷயங்களில் கூடுதலாக சேர்ப்பது. தொழுகையில் கூடுதலாக ரக்கஅத்துகளை சேர்ப்பது போல.*

*(3) வணக்க வழிபாடுகளை நிறைவேற்றுவதில் அல்லாஹ்வும், அவனுடைய தூதரும் காட்டித்தராத வழிமுறையில் நிறைவேற்றுவது. கூட்டாக சேர்ந்து திக்ருகளை ஒரே குரலில் பலத்த ஓசையில் படிப்பது; இது நபி (ஸல்) அவர்கள் காட்டித்தராத வழிமுறை.*

*(4) மார்க்கம் வரையறுக்காத ஒரு நேரத்தை குறிப்பாக்கி அந்த நேரத்தில் இபாதத்துகளை நிறைவேற்றுவது. குறிப்பாக ஷஃபான் உடைய மாதத்தை தேர்ந்தெடுத்து அதன் பகலில் நோன்பு நோற்பதும் இரவில் நின்று வணங்குவதும். இவை மார்க்கத்தில் தடை செய்யப்பட்டது ஏனென்றால் இவை மார்க்கம் காட்டித்தராதவைகள்.*

**மார்க்கத்தில் உருவாக்கக் கூடிய அனைத்து பித்அத்களுக்கும் சட்டம் என்ன?**

*எந்த பித்அத்களாக இருந்தாலும் அது எந்த வடிவில் இருந்தாலும் அவை* ***ஹராமாகும்-தடுக்கப்பட்டவையாகும்.***

*நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள், புதிய விடயங்களை உருவாக்கு வதை விட்டும் நான் உங்களை எச்சரிக்கிறேன். நிச்சயமாக புதிதாக உருவாக்கப்பட்ட பித்அத்கள் அனைத்தும் வழிகேடுகள்.*

*மேலும், நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள், யார் நம்முடைய விடயத் தில் புதிதாக ஒன்றை உருவாக்குகிறாரோ அது மறுக்கப்படும்.*

*மற்றொரு அறிவிப்பில் கூறினார்கள்:*

*யார் நம்முடைய விஷயம் அல்லாத புதிதாக செய்கிறாரோ அது மறுக்கப்படும்.*

*இந்த நபிமொழிகள் தெளிவாக எடுத்து காட்டுகிறது. மாக்கத்தில் புதி தாக உருவாக்கக் கூடிய அனைத்தும் பித்அத்கள். அனைத்து பித்அத்து களும் வழிகேடுகள். திருப்பப் படக்கூடியது.*

***கொள்கை விடயமாக இருந்தாலும் இபாதத் விடயமாக இருந்தாலும் அது ஹராமாகும். ஆனால் பித்அத்களுடைய வகைகளுக்கு ஏற்ப அதனுடைய சட்டங்களும் தீர்ப்புகளும் அமையும்.***

*(1) முஅதஸிலா, ஜஹ்மிய்ய போல கப்ரு வாசிகளிடம் உதவி தேடுவதும் அவர்களிடம் பிரார்த்தனை புரிவதும் அவர்களுக்காக நேர்ச்சை செய்வதும் அறுத்து பலியிடுவதும் கப்ருகளை சுற்றி வருவதும் தெளிவான இணைவைப்பில் அடங்கும். இது அவனை இஸ்லாமை விட்டு வெளியேற்ற கூடியது.*

*(2) இணைவைப்பின் தொடர்பில் அடங்குவது.*

*கப்ருகளின் மீது கட்டிடம் கட்டுவது. அந்த இடத்தில் தொழுவது. அந்த இடத்தில் இருந்து கொண்டு துஆ கேட்பது.*

*(3) வழிகெட்ட கொள்கை உடையவர்கள்.*

*ஹவாரிஜ், கதரிய்யா, முர்ஜிஆ போன்ற மார்க்கத்திற்கு முரணான கொள்கையுடையவர்கள்.*

*(4) இன்னும் சில பாவத்துடன் சம்பந்தமானவைகள். திருமணம் முடிக்காமல் பிரம்மச்சாரியாக இருப்பது; அல்லாஹ்விற்காக வெயிலில் நின்று தொழுவது; இச்சையை கட்டுப்படுத்த நாடி அதை துண்டிப்பது போன்றவைகள்.*

***கவனிக்க:*** *நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: "மாக்கத்தில் எல்லா புதிய விடயங்களும் வழிகேடுகள் என்று கூறியிருக்க; நல்ல பித்அத் கெட்ட பித்அத் என்று வகைப்படுத்தி கெட்ட பித்அத்துதான் வழிகேடு,*

நல்லபித்அத் வழிகேடு அல்ல என்று எவன் கூறினானோ அவன் தவறு செய்து விட்டான்''.

ஹாபித் இப்னு ரஜப் (ரழி) அவருடைய ஷரஹுல் அர்பயீனில் கூறுகிறார்கள்,

''நபி (ஸல்) கூறியிருக்கிறார்கள், எல்லா புதிய விஷயங்களும் வழிகேடு. இந்த வார்த்தை ஒரு முழுமையான வார்த்தை இந்த வார்த்தை யிலிருந்து எந்த பித்அத்தும் வெளியே செல்ல முடியாது. இது தான் இந்த மார்க்கத்துடைய அடிப்படை''.

இந்த வார்த்தை மற்றொரு நபிமொழியுடன் ஒத்துப் போகிறது.

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: ''யார் நம்முடைய விஷயத்தில் புதிதாக ஒன்றை உருவாக்குகின்றாரோ அது மறுக்கப்படும்''.

மார்க்கம் காட்டித்தராத அனைத்து புதிய விஷயமும் மறுக்கப்படும். அது வழிகேடாகும்.

சில விஷயங்களை அவர்களுக்கு ஆதாரமாக எடுப்பார்கள். உமர் (ரழி) அவர்கள் கூற்றை போன்று.

உமர் (ரழி) மக்களை தராவீற் தொழுகையில் சேர்த்துவிட்டு ெொன்னார்கள் 'இது நல்ல புதுமை (பித்அத்)' என்று. மேலும் குர்ஆனை தொகுத்தது, ஹதீஸ்களை தொகுத்தது போன்றவை. இவைகள் அவர்க ளுக்கு ஆதாரமாக ஒரு போதும் அமையாது. ஏனென்றால் இவைகளுக்கு மார்க்கத்தில் முன்மாதிரிகள் சட்டங்கள் உள்ளன. எனவே இவைகள் மார்க்கத்தில் புதிதாக உருவாக்கப்பட்டவைகள் அல்ல.

உமர் (ரழி) அவர்கள் கூறியது இது நல்ல பித்அத், அங்கு உமரின் நாட்டம் பித்அத் பொது நீதியாகவே தவிர, மார்க்கச் சட்டத்தில் அல்ல. ஏனென்றால், பித்அத்திற்கு சட்டத்தில் எந்த ஒரு முன்மாதிரியும் கிடையாது. ஆனால், உமர் (ரழி) மக்களை தராவீஹ் தொழுகயில் ஒன்று சேர்த்ததற்கு நபி (ஸல்) அவர்களிடம் முன் மாதிரி உண்டு. நபி(ஸல்) சில இரவுகளில் மக்களை ஒன்று சேர்த்து தராவீற் தொழுகை நடத்தியுள்ளார்கள். தொடர்ச்சியாக இதை செய்தால் மக்கள் மீது இது கடமையாக்கப்பட்டு விடுமோ என்ற அச்சத்தில் தனியாகவும் தொழுதுள்ளார்கள். ஸஹாபாக்கள் நபி (ஸல்) அவர்களுடைய வாழ்க் கையில் தராவீற் தொழுகையை தனித்தனியாகவும் கூட்டாகவும் தொழு துள்ளார்கள். நபி (ஸல்) அவர்களுடைய மரணத்திற்குப் பின் உமர் (ரழி) அவர்கள் மக்களை தராவீஹ் தொழுகையில் ஓர் இமாமுக்குப் பின்னால் ஒன்று சேர்த்து தொழ வைத்தார்கள். எவ்வாறு நபி(ஸல்) அவர்கள் மக்களை தராவீஹ் தொழுகையில் ஓர் இமாமுக்கு பின்னால் ஒன்று சேர்த்து தொழ வைத்தார்கள்; எவ்வாறு நபி (ஸல்) அவர்களுக்கு பின் ஸஹாபாக்கள் தராவீஹ் தொழுகையை நிறைவேற்றினார்களோ

அதை போல் உமர் (ரழி) அவர்களுடைய இந்த செயலுக்கு மார்க்கத்தில் முன்மாதிரி உள்ளன.

அதே போன்றுதான் குர்ஆனை ஒன்றாக தொகுத்தது. இது நபி (ஸல்) அவர்களின் முன்மாதிரி கொண்டுதான். நபி (ஸல்) அவர்கள் குர்ஆனை எழுதுமாறு ஏவிக்கொண்டு இருந்தார்கள்; ஹதீஸ்களும் அவ்வாறே சில நபித் தோழர்கள், நபி (ஸல்) அவர்களிடம் ஹதீஸ்களை எழுது வதற்கு அனுமதி கேட்டபோது அனுமதி அளித்தார்கள். ஆனால், இந்த ஹதீஸ்கள் குர்ஆனுடன் சேர்க்காமல் இருப்பதற்கு எச்சரிக்கை செய்யப்பட்டவர்களாக இருந்தார்கள். நபி (ஸல்) அவர்களுடைய மரணத்திற்குப் பின் இந்த எச்சரிக்கை நீங்கி விட்டது. ஏனென்றால், குர்ஆன் முழுமைப்படுத்தப்பட்டு பாதுகாக்கப்பட்டுவிட்டது. அதன் பிறகு முஸ்லிம்கள். நபி (ஸல்) அவர்களுடைய சுன்னாவையும், அல்லாஹ்வுடைய வேதத்தையும் அநியாயக்காரர்களிடம் இருந்து பாது காத்தலும் தொலைந்து போகாமலும் இருப்பதற்காக புத்தக வடிவில் கொண்டு வந்தார்கள். அல்லாஹ் அவர்களுக்கு நற்கூலி வழங்குவானாக. அவர்கள் அல்லாஹ்வுடைய வேதத்தையும் அவனுடைய தூதருடைய நபி மொழிகளையும் பாதுகாத்ததின் பகரமாக அல்லாஹ் அவர்களுக்கு சொர்க்கத்தை வழங்குவானாக.

## முஸ்லிம்களுடய வாழ்க்கையில் பித்அத் வெளிப்படுதல்

இவை இரண்டு விடயங்களில் உள்ளடங்கும்

### (1) பித்அத் தோன்றிய நேரம்:

இமாம் இப்னு தைமிய்யா (ரஹ்) கூறுகிறார்கள்: அறிந்து கொள்! இஸ்லாமிய கல்வி மற்றும் வணக்க வழிபாடுகள் சம்பந்தமான பித்அ த்துகள் நேர்வழி பெற்ற கலீஃபாக்களுடைய கடைசி காலத்தில் தோன்றியது. மட்டுமல்லாமல் அது நபி (ஸல்) அவர்களுடைய முன் அறிவிப்புமாகும்.

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்,

யார் எனக்குப் பிறகு வாழ்வாரோ அவர் அதிகமான கருத்து வேறுபாட்டை காண்பார். எனவே அந்த நேரத்தில் என்னுடைய வழிமு றையையும். நேர்வழி பெற்ற கலீஃபாக்களுடைய வழிமுறையும் பற்றி பிடித்துக் கொள்ளுங்கள். (அல்ஹதீஸ்)

முன்னர் தோன்றி கதரியா, இர்ஜாயி, கவாரிஜ் இந்த வழிகெட்ட கொள்கைகள் அடங்கிய பித்அத்துகளை அந்த நேரத்தில் உயிரோடு வாழ்ந்த ஸஹாபாக்கள் அதனை நிராகரித்து கொண்டும் தடுத்துக் கொண்டும் இருந்தார்கள். இவை நிகழ்ந்தது தாபியீன்கள் காலத்தில். அந்த காலத்தில் சில ஸஹாபாக்கள் உயிரோடு இருந்தனர். பின்பு முஅதஸிலாக்களுடைய பித்அத்துகள் தோன்றி அது முஸ்லிம் மக்க

ளிடையே பரவியது. பின்பு மக்களிடையெ சிந்தனையில் கருத்து வேறுபாடுகளும் மக்கள் பித்அத் மற்றும் மனோ இச்சையின் பக்கம் சாயக் கூடிய சூழலும் உருவாகியது. மேலும் அந்த சிறந்த மூன்று கூட்டங்களான ஸஹாபாக்கள், தாபியீன்கள், தபஅதாபியீன்களுக்கு பின்னால் சூஃபியாக்களுடைய பித்அத்தும் கப்ரு வாசிகளின் பித்அத்களும் வெளிவந்தது.

(2) பித்அத்கள் தோன்றிய இடம்:

இமாம் இப்னு தைமிய்யா (ரஹ்) கூறுகிறார்கள்,

நபித்தோழர்கள் வாழ்ந்த பெரிய நகரங்களிலிருந்து இறைநம்பிக்கையும், குர்ஆனுடைய, சுன்னாவுடைய மார்க்க விளக்கத்துடைய மற்றும் வணக்க வழிபாடுகளுடைய கல்விதான் வெளிவந்தன மதினா போன்ற நகரங்களைப் போல. மற்ற நகரங்களிலிருந்து ஷியா, முர்ஜிஆ பரவியது. பஸராவிலிருந்து கதரியா, முஅதஸிலா போன்ற வழி கெட்ட கொள்கைகள் பரவியது. ஆக கெட்ட மோசமான வழி கேடான கொள்கைகள் குராசான் பகுதியிலிருந்து வெளிப்பட்டது. இவ்வாறு எந்தளவு நகரங்கள், மதினாவைவிட்டு தூரமானதோ அவ்வளவு பித்அத்கள் அந்த இடத்தில் வெளிவந்தன. எப்போது உஸ்மான் (ரழி) கொல்லப்பட்ட பின் பிரிவினை உருவானதோ அப்போது ஹாரிஜிய்யா என்ற பித்அத் கொள்கைகள் வெளிவந்தன. ஆனால் மதினா நகரம் அந்த பித்அத்களிலிருந்து முழுமையாக பாதுகாக்கப்பட்டிருந்தது. அங்கே பித்அத்களும் பித்அத் வாசிகளும் இருந்தாலும் மறைமுகமாக இழிவுபடுத்தப்பட்டவர்களாக இருந்தார்கள். மதினாவில் சில கதரிய்யா கொள்கையுடையவர்கள் இருந்தனர். ஆனாலும் அவர்கள் கூஃபாவில் மிகைத்தவர்களாக இருப்பதை போன்று மதினாவில் இருக்கவில்லை. மாறாக ஒதுக்கப்பட்டவர்களாக தாழ்ந்தவர்களாக இருந்தார்கள். ஆனால், ஷாம், பஸரா, கூஃபாவில் பித்அத்கள் வெளிப்படையாக இருந்தன. நபி (ஸல்) அவர்களுடைய சொல் இதை நமக்கு தெளிவுபடுத்துகிறது.

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: “தஜ்ஜால் மதினாவில், மக்காவில் நுழைய முடியாது”.

தொடர்ச்சியாக, இமாம் மாலிக் (ரஹ்) அவர்களின் காலம் வரையில் மதினாவில் பித்அத்கள் வெளிப்படையாக இல்லை மற்ற இடங்களில் இருந்ததைப் போன்று.

### பித்அத்கள் தலைதூக்கியதற்கான சில காரணிகள்

எந்த ஒரு சந்தேகமும் இல்லை. யார் குர்ஆனையும் சுன்னாவையும் பற்றிப் பிடித்துக் கொண்டாரோ அவர் பித்அத்களிலிருந்தும் வழிகேடுகளிலிருந்தும் வெற்றி பெற்றுவிட்டார். குர்ஆன் சுன்னாவை பற்றிபிடிப்பதுதான் அனைத்து வழிகேடுகளிலிருந்தும் வெற்றி பெறமுடியும்.

وَأَنَّ هَٰذَا صِرَٰطِي مُسۡتَقِيمٗا فَٱتَّبِعُوهُۖ وَلَا تَتَّبِعُواْ ٱلسُّبُلَ فَتَفَرَّقَ بِكُمۡ عَن سَبِيلِهِۦۚ ذَٰلِكُمۡ وَصَّىٰكُم بِهِۦ لَعَلَّكُمۡ تَتَّقُونَ ١٥٣

*இன்னும் நிச்சயமாக இது நேரானதாக இருக்க என்னுடைய வழியாகும். ஆகவே இதனையே நீங்கள் பின்பற்றுங்கள். இன்னும் மற்ற வழிகளைப் பின்பற்றாதீர்கள். அவை அவனுடைய வழியிலிருந்து உங்களை பிரித்து விடும். (அல்அன்ஆம்:153)*

*மேலும் இதனை நபி (ஸல்) அவர்கள் நமக்கு தெளிவுபடுத்தி காட்டியுள்ளார்கள்.*

*நபி (ஸல்) கூறியதாக இப்னு மஷ்ஊத் (ரழி) அறிவிக்கிறார்கள், ‘‘நபி (ஸல்) அவர்கள் ஒரு கோடு ஒன்றை பூமியில் கீரினார்கள். கீரிவிட்டு ‘இது அல்லாஹ்வுடைய பாதை’ என்று கூறினார்கள். பின்பு அதன் இடது பக்கத்திலும் வலது பக்கத்திலும் பல கோடுகளை வரைந்தார்கள். பின்பு கூறினார்கள் ‘இந்த அனைத்து பாதைகளிலும் ஷைத்தான் அழைப்பாளராக நின்று கொண்டு இருக்கிறான்’. பின்பு இந்த வசனத்தை ஓதிக் காண்பித்தார்கள்;‘இன்னும் நிச்சயமாக இது நேரானதாக இருக்க என்னு டைய வழியாகும்; ஆகவே, இதனையே நீங்கள் பின்பற்றுங்கள். இன்னும் மற்ற வழிகளைப் பின்பற்றாதீர்கள். அவை அவனுடைய வழியிலிருந்து உங்களை பிரித்து விடும். (மேற்கூறப்பட்ட உபதேசங் களடங்கிய) அவை நீங்கள் பயபக்தி உடையவர்களாகவதற்காக இவற்றை (அல்லாஹ்வாகிய) அவன் உங்களுக்கு ஏவுகிறான் என்று கூறுவீராக. (அல்அன்ஆம்:153)*

*யார், அந்த நேரான பாதைக்கு இட்டுச் செல்லக் கூடிய அல்குர்ஆனையும் சுன்னாவையும் புறக்கணிக்கிறாரோ அவன் கண்டிப்பாக வழிகேடான பாதையில் விழுந்து விடுவார்.*

**பித்அத்கள் பரவுவதற்கு அடிப்படையான காரணிகள் சில:**

*(1) மார்க்க சட்டதிட்டங்களைப் பற்றி அறிவின்மை*

*(2) மனோயிச்சையை பின்பற்றுவது*

*(3) குர்ஆன் சுன்னாவிற்கு முக்கியத்துவம் கொடுக்காமல், புத்திகளுக்கு, தனி மனிதர்களுக்கு முக்கியத்துவம் கொடுப்பது.*

*(4) இணைவைப்பாளர்களை ஒப்புமை செய்வதும் அவர்களை பின்பற்றுவதும்.*

**இவைகள் ஒவ்வொன்றையும் சுருக்கமாகப் பார்ப்போம்**

**(1) மாக்க சட்டதிட்டங்களைப் பற்றி அறிவின்மை:**

*நபி (ஸல்) அவர்களின் ஸஹாபாக்கள், அந்த சிறந்த கூட்டங்கள் வாழ்ந்த காலங்களை கடந்து போனதால் பித்அத் வெளிப்படையாக பகிரங்கமாக தோன்றியது. காலங்கள் அவர்களைவிட்டு கடந்து போக*

*மார்க்க அறிவு குறைந்து அறிவின்மை தலை தூக்கியது. இதனை நபி (ஸல்) அவர்கள் தெளிவுபடுத்தி உள்ளார்கள்.*

*நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்,"உங்களில் யார் அதிகமான காலம் வாழ்வாரோ அவர் அதிகமான வேறுபாட்டை காண்பார்".*

*மேலும், நபி (ஸல்) கூறினார்கள்:*

*"அல்லாஹ் தஆலா, அறிவை தன்னுடைய அடியார்களிடமிருந்து ஒரே அடியாக பிடிங்கிவிடமாட்டான். மாறாக மார்க்க அறிஞர்களை கைப்பற்றுவதன் மூலம் இந்த பூமியிலிருந்து அறிவை கைப்பற்றுவான். எதுவரை எனில் மக்கள் அறிவீனர்களை தலைவர்களாக ஆக்கிக் கொண்டு அவர்களிடம் மார்க்க விஷயங்களில் தீர்ப்பு கேட்பார்கள். அதற்கு அவர்கள் எந்த மார்க்க அறிவில்லாமல் தீர்ப்பு கொடுத்து தானும் வழிகெட்டு மக்களையும் வழிகெடுப்பார்கள்".*

*மார்க்க கல்வியை சரியான முறையில் கொண்டுள்ள அறிஞர்களால் மட்டும்தான் பித்அத்களை ஒடுக்க முடியும். எங்கே மார்க்க கல்வியும் அதனை சரியான முறையில் பெற்ற மார்க்க அறிஞர்கள் இல்லையோ அங்கே பித்அத்களும் பித்அத்வாதிகளும் வெளிப்படுவார்கள்.*

**(2) மனோ இச்சையை பின்பற்றுதல்:**

*குர்ஆன் சுன்னாவை புறக்கனித்துவிட்டு மனோ இச்சையை பின்பற்றுதல்.*

*அல்லாஹ் தஆலா தனது திருமறையில் கூறுகிறான்:*

*(பின்னர்) உமக்கவர்கள் பதில் கூறவில்லையானால் நிச்சயமாக அவர்கள் பின்பற்றுவதெல்லாம் தங்களின் மனோ இச்சைகளைத்தான் என்று உறுதியாக நீர் அறிந்து கொள்வீராக! அல்லாஹ்விடமிருந்துள்ள நேர்வழியை அன்றி தன்னுடைய மனோ இச்சையை பின்பற்றியவனை விடவும் மிக வழிகெட்டவன் யார்? நிச்சயமாக அல்லாஹ் (இத்தகைய) அநியாயக்கார சமூகத்தாரை நேர்வழியில் செலுத்த மாட்டான். (அல் கஸஸ்)*

*நம்முடைய ஆசாபாசங்களுக்கு எதிராக அல்குர்ஆனிலோ நபிமொழி யிலோ வந்தால் நாம் நம்முடைய ஆசாபாசங்களை விட்டுவிட்டு குர்ஆன் சுன்னாவுக்கு கட்டுப்பட வேண்டும்.*

*மேலும், அல்லாஹ் தஆலா தனது திருமறையில் கூறுகிறான்:*

أَفَرَءَيْتَ مَنِ ٱتَّخَذَ إِلَٰهَهُۥ هَوَىٰهُ وَأَضَلَّهُ ٱللَّهُ عَلَىٰ عِلْمٍ وَخَتَمَ عَلَىٰ سَمْعِهِۦ وَقَلْبِهِۦ وَجَعَلَ عَلَىٰ بَصَرِهِۦ غِشَٰوَةً فَمَن يَهْدِيهِ مِنۢ بَعْدِ ٱللَّهِ ۚ أَفَلَا تَذَكَّرُونَ ﴿٢٣﴾

*(நபியே!) தன்னுடைய (மனோ) இச்சையை (த்தான் வணங்கும்) தெய்வமாக எடுத்துக் கொண்டானோ அவனை நீர் பார்த்தீரா? (அவன் வழிகெடுவதற்கு உரியவன் என்றதன்) அறிவினால், அல்லாஹ் அவனைத் தவறான வழியில் விட்டு விட்டான். அவனுடைய செவியின் மீதும் அவனுடைய இதயத்தின் மீதும் முத்திரையிட்டுவிட்டான்.*

*அன்றியும் அவன் பார்வையின் மீதும் ஒரு திரையை ஆக்கி விட்டான். அல்லாஹ்விற்குப் பிறகு அவனுக்கு நேர்வழி காட்டுபவர் யார்? நீங்கள் நினைவு கூர்ந்து உணரமாட்டீர்களா? (அல்ஜாஸியா:23)*

*மனோ இச்சைகளை பின்பற்றுவதோடு பித்அத்கள் பிணைக்கப் பட்டுள்ளன.*

**(3) குர்ஆன் சுன்னாவுக்கு முக்கியத்துவம் அளிக்காமல் புத்திகளுக்கும் தனிமனிதர்களுக்கும் முக்கியத்துவம் கொடுப்பது:**

*குர்ஆன் சுன்னாவுக்கு முக்கியத்துவம் கொடுப்பதை விட்டு புத்திக ளுக்கும் தனிமனிதர்களுக்கும் முக்கியத்துவம் அளிப்பது, அவர் சத்தி யத்தை விளங்க முடியாமல் ஆக்கிவிடும். சத்தியத்திற்கு நடுவே அவை கள் (மனிதனுடைய புத்திகள்) வந்துள்ளது. சத்தியத்தை உணரவி டாமல் தடுத்துக் கொள்ளும்.*

*அல்லாஹ் தஆலா கூறுகிறான்:*

وَإِذَا قِيلَ لَهُمُ ٱتَّبِعُوا۟ مَآ أَنزَلَ ٱللَّهُ قَالُوا۟ بَلْ نَتَّبِعُ مَآ أَلْفَيْنَا عَلَيْهِ ءَابَآءَنَآ ۗ أَوَلَوْ كَانَ ءَابَآؤُهُمْ لَا يَعْقِلُونَ شَيْـًٔا وَلَا يَهْتَدُونَ ﴿١٧٠﴾

*மேலும் (இவ்வேதமாகிய) அல்லாஹ் இறக்கி வைத்ததை பின்பற்றுங்கள் என அவர்களுக்கு கூறப்பட்டால்; 'இல்லை, நாங்கள் எங்களுடைய மூதாதையர்களை எதன் மீது கண்டோமோ அதையே நாங்கள் பின்பற்றுவோம் எனக் கூறுகின்றனர்'. (அல்பகரா:170)*

*இதனை இன்றைய இயக்க வாதிகளிடம், தரீக்கா வாதிகளிடமும், சூஃபியாக்களிடமும் மற்ற வழிகெட்ட கொள்கையுடையவர்களிடம் காண்கிறோம். இயக்க வாதிகள் தங்களுடைய தலைவர்களுக்கு முன்னுரிமை அளிப்பது. சூஃபியாக்கள் தங்களுடைய முர்ஷித்களுக்கு முக்கியத்து வம் கொடுப்பது. இவை நாங்கள் இன்றைய காலத்தில் கண்கூடாக பார்க்கிறோம். இதில் வருத்தப்படக் கூடிய விடயம் என்னவென்றால், குர்ஆன் சுன்னாவைத் தாண்டி தங்களுடைய இயக்கத் தலைவர்களுக்கும், அவருடைய புத்திகளுக்கும், தங்களுடைய முர்ஸித்களுக்கும், அவர்களு டைய கொள்கைகளுக்கும் முக்கியத்துவம் கொடுப்பது. அவர்களை குர்ஆன் சுன்னாவின் பக்கம் அழைத்தால்; குர்ஆனில் இப்படி வந்துள் ளது, சுன்னாவிலும் இப்படித்தான் இடம் பெற்றுள்ளது என்று கூறப்பட் டால் உடனே அவர்கள், 'இது எங்களுடைய புத்தகங்களுக்கு மாற்றமாக உள்ளது' என்று கூறுவார்கள். இதனை மேற்கூரிய இறைவசனம் கோடிட்டு காட்டுகின்றது.*

**(4) இணைவைப்பாளர்களை ஒப்புமை செய்வது:**

*இவை உங்களை பயங்கர வழிகேட்டில் தள்ளிவிடும். நபி (ஸல்) கூறியதாக அபூவாகிதுல் லைசி என்ற நபித்தோழர் அறிவிக்கிறார்கள், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) ஹுனைன் போருக்கு சென்றபோது (வழி யில்) இணைவைப்பாளர்களுக்குரிய ஒரு மரத்தை கடந்து சென்றார்கள்.*

*அது 'தாத்து அன்லாத்' என்று கருதப்பட்டது. அ(க்கால இணைவைப்ப) வர்கள் தங்களின் போர்க் கருவிகளை (பரக்கத் நாடி) அதன் மீது தொங்க விடுவார்கள். (பின்பு நாங்கள் பச்சை நிறமுடைய ஒரு பெரிய இலந்தை மரத்தை கடந்து சென்றோம்) அப்போது நாங்கள் (அல்லாஹ்வின் தூதரே!) நிராகரிப்பாளருக்கு 'தாத்து அன்லாத்' இருப்பதைப் போன்று எங்களுக்கும் ஒரு 'தாத்து அன்வாத்'தாக 'இதனை' ஏற்படுத்துங்கள் (நிராகரிப்பாளர்கள் தங்களின் போர்க் கருவிகளை தொங்கவிட்டு, அத னைச்சுற்றி இஃதிகாஃப் இருப்பார்கள்) என்றோம். அதற்கு நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். "சுப்ஹானல்லாஹ் (அல்லாஹு அக்பர்! என் உயிர் எவன் கைவசம் உள்ளதோ அவன் மீது ஆணையாக!) இது மூஸா வின் சமுதாயத்தார் இஸ்ரவேலர்கள் கூறியதைப் போலவே உள்ளது. அவர்கள் வைத்திருக்கும் சிலைகளைப் போல் எங்களுக்கும் ஒரு சி லையை ஆக்கி வையுங்கள் என்று அவர்கள் கூறினார்கள் (அதற்கு மூஸா (அலை)) 'நிச்சயமாக நீங்கள் அறிவில்லாத மக்களாக இருக்கிறீர்கள்' என்று கூறினார். இவையெல்லாம் அறியாமைக்கால முன்னோர்களின் செயல்கள். என் உயிர் எவன் கைவசம் உள்ளதோ அவன் மீது ஆணையாக! நீங் கள் உங்கள் முன்னிருந்தவர்களுடைய வழிகளைப் படிப்படையாகப் பின்பற்றுவீர்கள்". (அஹ்மத்)*

*இந்த சம்பவத்தின் வாயிலாக நமக்கு தெளிவாகிறது. பனீ இஸ்ரவே லர்களையும், நபி(ஸல்) அவர்களோடு இருந்த சில நபித்தோர்களையும் இணைவைப்பிற்கு தூண்டியது இணைவைப்பாளர்களை 'ஒப்புமை' செய்ததுதான். இணை வைப்பாளர்களை 'ஒப்புமை' செய்வது மிகவும் ஆபத்தான ஒரு விடயம்.*

*இது இந்த காலத்தில் சாராதரணமாக நடைபெற்றுக் கொண்டிருக் கிறது. முஸ்லிம்களில் அதிகமானவர்கள் இணைவைப்பாளர்களை ஒப்புமை செய்து அதே திருநாளைப் போன்று இஸ்லாமிய மார்க்கத் தில் புகுத்தி விட்டனர். இதை இந்த கப்ரு வணங்களிடமும், சூஃபியாக்களி டமும் ஏராளமாக காணலாம். மீலாது விழா; மார்க்கம் காட்டித் தராத சில மாதங்களை தேர்வு செய்து அதில் வணக்க வழிபாடு செய்வது;சில கப்ருகளின் போட்டோக்களை வீட்டில் தொங்கவிடுவது என்று சிலவற்றை கூறலாம்.*

**பித்அத்வாதிகளின் மீதும் அவர்களின் வழிமுறைகள் மீதும் 'அஹ்லுசு ன்னா வல் ஜமாஅத்' உடைய நிலைப்பாடு**

*தொடர்ச்சியாக அஹ்லுசுன்னா வல் ஜமாஅத் பித்அத்வாதிகளுக்கு மறுப்புகளும், பதில்களும் கொடுத்த வன்னமே உள்ளனர். அவர்களுடைய வழிகேட்டை மக்களுக்கு எடுத்துக்காட்டியும் மக்கள் அதில் விழுந்து விடாதவாறு அவர்களைதடுத்தும் கொண்டிருக்கின்றனர்.*

**அவைகளில் சில முன்மாதிரிகள்:**

*(1) உம்மு தர்தா (ரழி) கூறுகிறார்கள், அபுதர்தா (ரழி) அவர்கள் கோபம் கொண்டவர்களாக வீட்டினுள் நுழைந்தார்கள். நான் கேட்டேன், "உங்களுக்கு என்ன நேர்ந்தது?" அதற்கு அபுதர்தா (ரழி) பதில் கூறினார்கள் "உங்கள் சமூகத்தில் இப்பொழுது நபி (ஸல்) அவர்களுடைய கட்டளை எதையும் நான் காணவில்லை அவர்கள் சேர்ந்து தொழுவதை தவிர".*

*(2) அம்ரு இப்னு யஹ்யா அவர்கள் கூறுகிறார்கள்,*

*என் தந்தை அவருடைய தந்தையைப் பற்றி பேசியதை நான் கேட்டேன். நாங்கள் அப்துல்லாஹ் இப்னு மஷ்ஊத் (ரழி) வீட்டில் அமர்ந்திருந்தோம். மதிய தொழுகைக்கு முன்னால் திடீரென்று இப்னு மஷ்ஊத் (ரழி) வெளியே வந்தார்கள். நாங்கள் அவருடன் பள்ளியை நோக்கி நடந்தோம். (சிறிது நேரத்தில் நாங்கள் பள்ளிவாசல் வெளியே அமர்ந்து கொண்டு இருந்தோம். அப்போது) அபூமூஸா அஸ்அரி (ரழி) வந்து கேட்டார்கள், "அபு அப்துர்ரஹ்மான் (இப்னு மஷ்ஊத்) வெளிவந்துவிட்டாரா?" என்று. நாங்கள் "இல்லை" யென்று கூறினோம். பின்பு அவரும் எங்களுடன் அமர்ந்து கொண்டார். பின்பு அபு அப்துர்ரஹ்மான் (இப்னு மஷ்ஊத்) வெளிவந்தார்கள். நாங்கள் அவருடன் எழுந்து நின்று கொண்டோம். அப்போது "அபு அப்துர் ரஹ்மான் சற்று முன்பு நான் பள்ளிவாயில் சிலவற்றை கண்டேன். அதை நல்லதாக நினைத்தேன்" என்று அபூமூஸா அஸ்அரி (ரழி) கூறினார்கள். "அது என்ன?" என்று இப்னு மஷ்ஊத் (ரழி) கேட்டார்கள்.*

*அபூமூஸா அஸ்அரி (ரழி) கூறினார்கள், "ஒரு பள்ளிவாசலில் ஒரு கூட்டம் வட்டவட்டமாக அமர்ந்து கொண்டு தொழுகையை எதிர்பார்த்த வன்னம் இருக்கின்றனர். ஒவ்வொரு சபையிலும் இருக்கின்ற மனிதர்கள் கையில் சிறிய கற்கள். அதில் ஒருவர் நூறு முறை தக்பீர் சொல்லுங்கள் என்று சொல்கின்றார். மற்றவர்களெல்லாம் நூறு முறை தக்பீர் சொல்கிறார்கள். அது போன்று நூறு முறை லாயிலாஹ இல்லல்லாஹ், சுப்ஹானல்லாஹ்... அவர் சொல்ல அவரைப் பின் தொடர்ந்து மக்கள் சொல்கிறார்கள்" என்று கூறினார்.*

*இப்னு மஷ்ஊத் (ரழி) கேட்டார்கள், "அவர்களிடம் நீர் ஏதாவது சொன்னீரா?" அபூமூஸா (ரழி) கூறினார், "நான் அவர்களுக்கு ஒன்று கூறவில்லை. உங்களுடைய கட்டளையை எதிர்ப்பாத்துக் கொண்டிருக்கிறேன்" என்றார்.*

*பின்பு இப்னு மஷ்ஊத் (ரழி) "நான் அவர்களுடைய பாவங்களை கணக்கிடும்படி கட்டளையிடவில்லையே" என்று கூறிவிட்டு அந்த பள்ளிவாசலை நோக்கி நடந்தார். நாங்களும் அவருடன் நடந்தோம் பின்பு அவர் அந்த வட்டமான சபையை வந்தடைந்த போது கேட்டார், "என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்?"*

*அதற்கு அவர்கள் கூறினார்கள், "ஓ அபா அப்துர்ரஹ்மான்! எங்கள் கையில் சில கற்களை வைத்துக் கொண்டு அல்லாஹு அக்பர் என்றும் சுப்ஹானல்லாஹ் என்றும் சொல்லிக் கொண்டு எண்ணிக் கொண்டும் இருக்கிறோம் என்றார்கள்". அதற்கு அபு அப்துர்ரஹ்மான் (இப்னு மஷ்ஊத்) (ரழி) கூறினார்கள், "மாறாக நீங்கள் உங்கள் பாவங்களை எண்ணிக் கொள்ளுங்கள். உங்களுக்கு கேடு உண்டாகட்டும். என்ன இது அழிவை நோக்கி வேகமாக சென்று கொண்டிருக்கிறீர்கள். நபித் தோழர்கள் உயிரோடு இருக்கும் நிலையில் இதனை செய்ய துனிந்து விட்டீர்கள். என் உயிர் எவன் கைவசம் உள்ளதோ அவன் மீது சத்திய மாக, ஒன்று நீங்கள் சிறந்த பாதையில் இருக்கின்றீர்கள் அல்லது முஹம்மது (ஸல்) அவர்கள் சிறந்த பாதையில் இருந்தார்கள். அப்படி (முஹம்மது நபி (ஸல்) அவர்கள்தான் சிறந்த பாதையில் இருந்தார்கள் என்றால்) நீங்கள் வழிகேட்டின் வாசலை திறந்து விட்டீர்கள்" என்று கூறினார்கள். (அவர்கள் பதிலளிக்க முனைந்து) "அபா அப்துர்ரஹ்மான் (இப்னு மஷ்ஊத்) அவர்களே நாங்கள் நன்மையை தவிர வேறொன்றும் நாட வில்லை" என்று கூறினார்கள். இப்னு மஷ்ஊத் (ரழி) சொன்னார்கள், "எவ்வளவோ நபர்கள் நன்மையை நாடுகிறார்கள் ஆனால் அதனை சரியான முறையில் பெற்றுக் கொள்வதில்லை. நிச்சயமாக நபி (ஸல்) கூறினார்கள், ஒரு கூட்டம் குர்ஆனை ஓதுவார்கள். அது அவர்களின் தொண்டைக் குழிக்குகீழ் இறங்காது என்று கூறினார்கள்".*

*(3) இமாம் மாலிக் (ரஹ்) அவர்களிடம், ஒரு மனிதர் வந்து "அல்லாஹ் அர்ஷின் மீது உயர்ந்து விட்டான் (அல்குர்ஆன்). எவ்வாறு உயர்ந்தான்?" என்று கேட்டான். அதற்கு இமாம் மாலிக் அவர்கள், "நான் உன்னை பித்அத் வாதியாகத்தான் பார்க்கிறேன்" என்று கூறி அவனை அவருடைய சபையிலிருந்து வெளியேற்றி விட்டு கூறினார்கள். "அல்லாஹ் அர்ஷின் மீது உயர்ந்து விட்டான் என்பது அனைவரும் அறிந்தது; அது எவ்வாறு என்பது அனைவரும் அறியாதது; அதனைக் கொண்டு நம்பிக்கை கொள்வது கட்டாயக் கடமை. அதனைப் பற்றி கேள்விகேட்பது பித்அத் (வழிகேடு)" என்று கூறினார்கள்.*

### பித்அத் வாதிக்கு மறுப்பு கொடுப்பதிலும், பதில் கொடுப்பதிலும் 'அஹ்லு சுன்னா வல் ஜமாஅத்'வுடைய வழிமுறைகள்

*பித்அத் வாதிகளுக்கு மறுப்பு கொடுப்பதிலும் அவர்களுக்கு பதில் கொடுப்பதிலும் அஹ்லு சுன்னா வல்ஜமாஅத்வுடைய வழி முறை குர்ஆன், சுன்னாவில் கட்டியமைக்கப்பட்டது. பித்அத்களை உடைப்ப திலும் அதை அழிப்பதிலும் அவர்களின் வழிமுறை அல்குர்ஆன் மற்றும் சுன்னாவின் மூலம் பித்அத்வாதிகளுக்கு மறுப்பு கொடுத்து உலமாக்கள் பல புத்தகங்களை தொகுத்துள்ளனர். ஷியா, கவாரிஜ், ஜஹ்மிய்யா, முஅதஸிலா, அஸ்கரியா போன்ற வழிகெட்ட கொள்கை*

களுக்கு மறுப்பு கொடுத்தும் பதில் கொடுத்தும் பல புத்தகங்களை உலமாக்கள் குர்ஆன் சுன்னா அடிப்படையில் தொகுத்துள்ளனர். குறிப்பாக ஒவ்வொரு வழிகெட்ட கொள்கைகளுக்கும் தனித்தனியாக புத்தகங்களை தொகுத்துள்ளனர்.

இமாம் அஹ்மத் (ரஹ்) அவர்களுடை 'ஜஹ்மிய்யாவிற்கு மறுப்பு' என்ற புத்தகம்; இது போன்று இமாம் உஸ்மான் இப்னு ஸயீத் (ரஹ்); இமாம் இப்னு தைமிய்யா (ரஹ்) ;அவர்களுடைய மாணவரான இப்னு கையும் (ரஹ்); இன்னும் இமாம் முஹம்மது இப்னு அப்துல் வஹ்ஹாப் (ரஹ்) போன்றவர்கள் பல புத்தகங்களை வழிகெட்ட கொள்கைக்கு எதிராக தொகுத்துள்ளார்கள். அதில் குறிப்பாக சில புத்தகங்களை உங்களுக்கு எடுத்துக் காட்டுகிறோம்.

இந்த புத்தகங்களில் அனைத்த வழிகெட்ட கொள்கைகளுக்கும் இமாம் இப்னு தைமிய்யா (ரஹ்) அவர்கள் மறுப்பு கொடுத்துள்ளார்கள் மற்றும் அந்த வழிகேட்டை தெளிவும் படுத்தியுள்ளார்கள்.

**பழைய கால புத்தகங்கள்:**

>> இமாம் ஷாதிபி (ரஹ்) ------அல் இஃதிஸாம்

>> இமாம் இப்னு தைமிய்யா---- இக்திதாவு சிராத்துல் முஸ்தகீம்

>> இமாம் இப்னு வத்தாஹ் ----இன்காருல் கவாதில் வல் பித்ஆ

>> இமாம் துர்தூஷி ----அல்கவாதிஷ் வல் பித்ஆ

>>இமாம் அபிஷாமா-----பாயிஸீல் அலா அன்காருல் பித்ஆ வல்கவாதிஸ்

**தற்கால புத்தகங்கள்:**

>> இமாம் அலி மக்ஃபூத் ------இப்தாவு ஃபி மதாரில் இப்திதாயி

>> இமாம் முஹம்மது இப்னு அஹ்மத் --- சுனன் வல் முப்ததியாதுத்து முதஅல்லிகது பில் அத்கார் வஸ்ஸலவாத்

>> இமாம் அப்துல் அஜீஸ் இப்னு பாஸ் ---தஹ்தீருல் மினல் பித்ஆ

எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே! தொடர்ச்சியாக அஹ்லுஸ் சுன்னா வல் ஜமாஅத்துடைய உலமாக்கள் பித்அத்துகளை எதிர்த்து அது வளரவிடாமல் தடுத்தும்; அதற்கு எதிராக போராடியும் வருகின்றனர். அது எந்த வகையில் வரக் கூடிய பித்அத்துகளாக இருந்தாலும் சரியே. ரேடியோ மூலமாகவோ, மாதாந்திர பத்திரிக்கை, வராந்திர பத்திரிக்கை, தினசரி பத்திரிக்கை, ஜும்மா உரை, பயான் வகுப்பு போன்ற எத்தனை வடிவில் வந்த போதிலும் அஹ்லுஸ் சுன்னா வல் ஜமாஅத்தைச் சார்ந்த உலமாக்கள் அதனை முஸ்லிம் மக்களிடம் சென்றடைவதை விட்டும் தடுக்க பல முயற்சிகளை மேற்கொண்டு வருகின்றனர்.

**இன்றைய கால பித்அத்கள்:**

*காலங்கள் அந்த சிறந்த சமுதாயங்களைவிட்டு உருண்டோடியதாலும்; குறைவான அறிவினாலும் இன்று பித்அத்கள் நிரம்பி வழிகின்றன. நிறைய அழைப்பாளர்கள் பித்அத்தின் பக்கமும்; அல்குர்ஆன் சுன்னாவிற்கு எதிரான கொள்கையின் பக்கமும்; தனி மனிதர்களின் பக்கமும் இணைவைப்பாளர்களை ஒப்புமை செய்வதின் பக்கமும்; அவர்களின் பழக்க வழக்கங்களின் பக்கமும் சுறுசுறுப்பாக அழைத்துக் கொண்டிருக்கிறார்கள்.*

*நபி (ஸல்) கூறினார்கள், ''நீங்கள் உங்கள் முன் சென்றோரின் வழியை பின்பற்றுவீர்கள்''.*

*அதில் ஒன்றுதான் ரபிவுல் அவ்வல் மாதத்தில் நபி (ஸல்) அவர்களின் பிறந்த நாளை கொண்டாடுவது. இந்த நபிமார்களின் பிறந்த நாட்களை கொண்டாடுவது கிருஸ்த்தவர்களின் பழக்கங்கள்; இந்த முஸ்லிம் மக்கள் அதை உள்வாங்கி அவர்களை ஒப்புமை செய்து முஹம்மது (ஸல்) அவர்களுக்கு இவர்கள் பிறந்தநாள் விழா கொண்டாட ஆரம்பித்து விட்டார்கள்.*

*முஸ்லிம்களின் அறிவின்மை காரணமாகவும் வழிகெட்ட தலைவர்களின் காரணமாகவும் ஒவ்வொரு வருடமும் ரபியுல் அவ்வல் மாதத்தில் நபி முஹம்மது (ஸல்) அவர்களுக்கு இவர்கள் பிறந்த நாள் கொண்டாட ஆரம்பித்து விட்டனர். இதற்கென சிலர் பள்ளிவாசல்களை அலங்கரித்து அதில் பிறந்த நாள் விழா கொண்டாடுகின்றனர். இன்னும் சிலர் தங்கள் வீடுகளிலும் இன்னும் சிலர் அதற்கென்று குறிப்பிட்ட இல்லங்களை தயார் படுத்துகின்றனர். இவையெல்லாம் அந்த கிறிஸ்த்துவர்கள் ஈஸா (அலை) அவர்களுக்கு கொண்டாடியதைப் போன்றுதான் அன்றி வேறில்லை. இது மார்க்கம் காட்டித் தராத ஒரு வழிமுறை. எந்த சந்தேகமும் இல்லை இது வழிகேடு என்பதில் இது கிறிஸ்த்தவர் களை ஒப்புமை செய்வது ஆகும்.*

*நபி (ஸல்) கூறினார்கள், ''யார் ஒரு கூட்டத்தை ஒப்புமை செய்கிறாரோ அவர் அவரைச் சார்ந்தவர்''.*

*எனவே அடுத்த சமுதாயத்தை ஒப்புமை செய்வது நமக்கு ஆகுமானதல்ல. மற்றொன்று இதில் இணைவைப்பில் தள்ளக் கூடிய விஷயங்களும் சில தீமைகளும் உள்ளன. நபி (ஸல்) அவர்களை புகழ்ந்து பாடுவது அந்த புகழ்ச்சியில் நபி (ஸல்) அவர்களை அல்லாஹ்விற்கு நிகராக உயர்த்துவது. நபி (ஸல்) அவர்களிடம் பாவமன்னிப்பு கேட்பது போன்றவைகள் உள்ளன.*

*நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:*

*கிருஸ்தவர்கள் மர்யம் உடைய மகன் ஈஸாவை (அலை) புகழ்ந்தது போன்று என்னை புகழாதீர்கள். நிச்சயமாக நான் அல்லாஹ்வின் அடிமைஅவனுடைய தூதர் என்றும் கூறுங்கள். (அல் ஹதீஸ்)*

*மேலும் இதில் கீதங்கள், இசைக் கருவிகள் வாசிப்பது. மேளம், தாளம் கொட்டுவது, பித்அத்தான திக்ருகளை ஓதுவது. ஆண்கள், பெண்கள் ஒரே இடத்தில் கலப்பது இவை ஒரு மனிதனை தவறான விஷயத்தில் தள்ளக் கூடிய காரியங்கள். இது போன்ற தீமையான விஷயங்கள் மலிந்து காணப்படுகின்றன.*

*அல்லாஹ் தனது திருமறையில் கூறுகின்றான்:*

*அவர்கள் எத்தகையோர் என்றால் பொய் சாட்சி சொல்ல மாட்டார்கள் (ஒரு கால்) வீனான காரிய (ம் நடக்கும் இட)த்தின் பக்கம் சென்றுவிட்டால். கண்ணியமாக (அதனை விட்டும் ஒதுங்கி) சென்று விடுவார்கள்.*

*ஒரு கால் இந்த எச்சரிக்கைக்கு செவிமடுத்து அதனைவிட்டு ஒதுங்கி 'நாங்கள் அவ்வாறு இனி செய்வதில்லை மாறாக தங்கள் வீடுகளிலேயே இனிப்புப் பண்டங்களை சமைத்து பரிமாரிக் கொள்கிறோம்' என்று சொன்னால். அவர்களுக்கு நீங்கள் சொல்லுங்கள் அதுவும் பித்அத்தான்.*

*நபி (ஸல்) கூறினார்கள், "எல்லா புதிய விடயமும் பித்அத் ஒவ்வொரு பித்அத்தும் வழிகேடு".*

*இவைதான் பெரிய பித்அத்தின் பக்கம் பெரிய தீமையின் பக்கம் உங்களை இழுத்துச் செல்லக் கூடியது.எனவே இதனையும் தவிர்த்திருங்கள். இதற்கு குர்ஆன், சுன்னாவிலோ இஸ்லாமிய ஷரிஅத்திலோ ஸஹாபாக்களின் வாழ்க்கையிலோ எந்த முன்மாதிரியும் இல்லை. பின்னால் வந்தவர்களான 'ஷியாக்கள்' இதனை ஆரம்பித்தார்கள்.*

*இமாம் அபு கம்ஃத் அத்தாஜுத்தீன் (ரஹ்) அவர்களிடம், "நபி(ஸல்) அவர்களின் பிறந்தநாள் விழா கொண்டாடுவது பித்அத் ஆகுமா? அல்லது அதற்கு மார்க்கத்தில் ஏதும் ஆதாரம் உண்டா? என்று கேட்கப்பட்டது" அதற்கு அவர்கள் பதில் கூறினார்கள். "நபி (ஸல்) அவர்களின் பிறந்த நாள் விழாவிற்கு குர்ஆனிலோ சுன்னாவிலோ எந்த ஒரு ஆதாரமும் நான் அறியவில்லை. மேலும் மார்க்கத்தை சரியான முறையில் கற்றுத் தேர்ந்த அந்த மார்க் அறிஞர்களிடமும் இதற்கு எந்த முன்மாதிரியும் இல்லை. அவர்கள்தான் இந்த மார்க்கத்தில் நமக்கு முன்மாதிரியானவர்கள். மேலும் அவர்கள்தான் நபி (ஸல்) அவர்களின் சுன்னாவை பற்றிப் பிடிக்கக் கூடியவர்கள். மாறாக பித்அத்வாதிகள் அவர்களின் மனோ*

இச்சையின் அடிப்படையில் இதனை உருவாக்கிவிட்டார்கள்''.

இமாம் இப்னு தைமிய்யா (ரஹ்) கூறுகிறார்கள்:

மக்களில் சிலர் கிருஸ்தவர்களை ஒப்புமை செய்து, நபி (ஸல்) அவர்களுடைய பிறந்தநாளை கொண்டாடு கிறார்கள். மேலும் சிலர் இதனை நபி (ஸல்) அவர்கள் மேல் உள்ள விருப்பத்தின் காரணமாகவும் அவருக்கு மேல் உள்ள மரியாதையின் காரணமாகவும் கொண்டாடுகின்றோம் என்கின்றனர். எதுவாக இருந்தாலும் இது ஸஹாபாக்களிடம் இல்லாத ஒன்று ஒரு வேலை இது நன்மையான காரியமாகவும் நபி (ஸல்) அவர்க ளின் மேல் உள்ள விருப்பத்தை எடுத்துக்காட்டுவதாகவும் இருந்தால். இதனை செய்வதில் அந்த ஸஹாபாக்கள் முந்தியிருப்பார்கள். ஏனென் றால் அவர்கள்தான் நபி (ஸல்) அவர்களின் மேல் அதிக நேசம் கொண்ட மக்களாக இருந்தார்கள். மேலும் நன்மையின் பக்கம் விரையக் கூடிய மக்க ளாகவும் இருந்தார்கள். மாறாக அவர்களுக்கிருந்த அந்த நபியின் விருப்பமானது, நபி (ஸல்) அவர்களை பின்பற்றுவதில்தான் இருந்தது. அவர்கள் ஏவியதை நிறைவேற்றுவதிலும் அவர்கள் தடுத்ததை விட்டும் விலகுவதிலும்தான் காணப்பட்டது. நபி (ஸல்) அவர்களுடைய ஒவ் வொரு சுன்னாவையும் உயிர்ப்பிக்க கூடியவர்களாக இருந்தார்கள். நபி (ஸல்) அவர்களுக்காக தங்களுடைய உயிராலும், பொருளாலும் தியாகம் செய்தார்கள். நிச்சயமாக இது அந்த முன் சென்றோர்களாகிய அந்த முஹாஜிர்கள் அன்ஸார்களின் வழியும், அதனை நல்ல முறையில் பின் தொடர்ந்தோர்களின் வழியும் ஆகும்.

இது சம்பந்தமாக முன்சென்ற உலமாக்கள் நிறைய புத்தகங்களை தொகுத்துள்ளனர். நபி (ஸல்) அவர்களின் பிறந்தநாள் கொண்டாடுவது ஒவ்வொரு இயக்கத் தலைவர்களின் பிறந்த நாட்களையும், சூஃபிகளின் முர்ஸித்களின் பிறந்த நாட்களை கொண்டாடுவதற்கும் வழி வகுத்து விடும்.

## குறிப்பிட்ட இடங்கள்,அடையாளச் சின்னங்கள், நல்லடியார்களைக் கொண்டு பரக்கத் தேடுவது பற்றிய பாடம்

'அல் தப்ரக்' (التبرك) என்ற அரபி வார்த்தைக்கு ஒரு விஷயத்தில் பரக்கத் வேண்டுவது. மேலும் ஒரு விஷயத்தில் இருக்கின்ற பரக்கத்தை நிலைப்படுத்துவதற்காகவும் அல்லது அதில் மேலும் பரக்கத்துகளை அதிகப்படுத்துவதற்காகவும் தேடுதல்.

நீங்கள் பரக்கத் தேடுவது, யார் அதற்கு தகுதியுடையவரோ பரக்கத் வழங்க சக்தியுடையவரோ அவரிடம் மட்டும்தான் தேடவேண்டும்.

அவன்தான் பரக்கத்தை ஒரு அடியான் மீது பொழிகின்றான் மேலும் அதை உறுதிப் படுத்துகின்றான். இதில் படைப்பினங்களுக்கு எந்த தகுதியும் சக்தியும் இல்லை.

குறிப்பிட்ட இடங்களைக் கொண்டோ அல்லது அடையாளச் சின்னங்களைக் கொண்டோ அல்லது உயிரோடு மற்றும் இறந்த நல்லடியார்களைக் கொண்டோ பரக்கத் தேடுவது மார்க்கத்தில் தடை செய்யப்பட்ட ஒன்றாகும். எதனிடம் பரக்கத் தேடுகிறார்களோ அவர்கள் நன்மையோ அல்லது தீமையோ செய்ய சக்தி பெறமாட்டார்கள். இது இணைவைப்பில் அடங்கும். கப்ருகளைத் தொட்டு உடம்பில், முகத்தில் பரக்கத்துக் காக தடவுவதும் இணைவைப்பிற்கு இட்டுச் செல்லும்.

ஸஹாபாக்கள், நபி (ஸல்) அவர்களுடைய முடியை வைத்து அவர் களுடைய வேர்வையை வைத்து பரக்கத் தேடியதெல்லாம் அது நபி (ஸல்) அவர்களுக்கு மட்டும் உள்ளது. அதுவும் அவர்கள் உயிரோடு இருக்கும் காலத்தில் மட்டும்தான். நபி(ஸல்) அவர்கள் மரனித்த பிறகு, எந்த ஒரு நபித்தோழரும், நபி (ஸல்) அவர்கள் வாழ்ந்த அறைகளைக் கொண்டோ அவர்களுடைய கப்ருகளைக் கொண்டோ பரக்கத் தேடவில்லை. மேலும் நபி (ஸல்) அவர்கள் நின்ற இடம், தொழுத இடம், அமர்ந்த இடம், அவற்றைக் கொண்டு பரக்கத் தேடியவர்களாக நபித்தோழர்கள் இருந்ததில்லை. அது மட்டுமல்லாமல் சிறந்த நல்லடியார்களான அபூபக்ர் (ரழி), உமர் (ரழி) போன்ற நபித்தோழர்களின் கப்ருகளைக் கொண்டும், அவர்கள் வாழ்ந்த இடங்களைக் கொண்டும் அவர்கள் உயிரோடு இருந்த காலத்திலும் சரி மரணித்த பின்னாலும் சரி பரக்கத் தேடக் கூடியவர்களாக இருந்ததில்லை. நபித்தோழர்கள் ஹிரா குகைக்கு சென்று அங்கு தொழுது பரக்கத் தேடக் கூடியவர்களாக காணப்படவி ல்லை. மூஸா (அலை) அவர்களிடம் அல்லாஹ் பேசிய மலைக்கு சென்று பரக்கத் தேடக் கூடியவர்களாக இல்லை. இது போன்ற இடங்களையோ அல்லது அடையாளச் சின்னங்களையோ குறிப்பிட்ட மனிதர்களைக் கொண்டோ அவர்கள் பரக்கத் தேடக் கூடியவர்களாக இருந்ததில்லை.

இன்றைய காலத்தில் வணக்க வழிபாடுகளுடைய விஷயத்தில் நிறைய பித்அத்துகளை உருவாக்கியிருக்கிறார்கள். அதற்கு மார்க்கத்தில் எந்த ஒரு முன்மாதிரியும் இல்லை.

நபி (ஸல்) கூறினார்கள், ''யார் நம்முடைய (மார்க்கத்தில்) விஷயத் தில் புதிதாக ஒன்றை செய்கிறாரோ அது மறுக்கப்படும்''.

**இன்றைய காலத்தில் உருவாக்கப்பட்ட பித்அத்களில் சில:**

(1) தொழுகையின் போது நிய்யத்துகளை வெளிப்படுத்துகின்ற

*பெயரில் சப்தத்துடன் ‘ நவய்த்து அன் அஸல்லி’ என்று சொல்லுவது இது வழிகேடு. இது அல்குர்ஆனும் சுன்னாவும் காட்டித்தராத ஒன்றாகும்.*

*அல்லாஹ் கூறுகிறான்:*

قُلْ أَتُعَلِّمُونَ ٱللَّهَ بِدِينِكُمْ وَٱللَّهُ يَعْلَمُ مَا فِى ٱلسَّمَٰوَٰتِ وَمَا فِى ٱلْأَرْضِ ۚ وَٱللَّهُ بِكُلِّ شَىْءٍ عَلِيمٌ ﴿١٦﴾

*(நபியே!) நீர் கூறுவீராக, உங்கள் மார்க்கத்தை நீங்கள் அல்லாஹ்விற்கு கற்றுக் கொடுக்கின்றீர்களா? அல்லாஹ்வோ வானங்களில் உள்ளவற்றை யும் பூமியில் உள்ளவற்றையும் நன்கு அறிவான். அன்றியும் அல்லாஹ் ஒவ்வொரு பொருளைப் பற்றியும் நன்கறிவான். (அல்ஹுஜுராத்:16)*

*(2) தொழுகையின் பிறகு கூட்டாக சேர்ந்து திக்ருகளை செய்வது. மாறாக தனித் தனியாக செய்வதுதான் மார்க்கத்தில் உள்ள விஷயம். கூட் டாக சேர்ந்து செய்வது பித்அத் ஆகும்.*

*(3) ஜனாஸா தொழுகையின் பிறகு பாத்திஹா சூரா ஓதுவது.*

*(4) இறந்து போனவர்களுக்காக ஏழாம் பாத்தியா, எட்டாம் பாத்தியா போன்ற வழிபாடுகள் செய்வது.*

*(5) நபி (ஸல்) அவர்களுடைய ‘ மிஃராஜ்’ பயணம் போன்ற நாட்களை பெருநாட்களாக கொண்டாடுவது அல்லது மார்க்கம் காட்டித்தராத பெருநாட்களை கொண்டாடுவது.*

*(6) ரஜப் மாதத்தை குறிப்பாக ஆக்கி ‘உம்ரத்து ரஜபிய்யா’ என்று உம்ரா செய்வது, அந்த மாதத்தில் நோன்பு நோற்பது, இரவில் நின்று வணங்குவது போன்றவைகள். ரஜப் மாதம் ஏனைய மாதங்களைப் போன்றுதான் அதில் எந்த சிறப்பும் இல்லை.*

*(7) அல்குர்ஆன், சுன்னாவில் இல்லாத சூஃபியாக்களின் திக்ருகளைப் போல.*

*(8) ஷஃபான் உடைய மாதத்தில் நோன்பு நோற்பது, இரவு நின்று வணங்குவது.*

*(9) கப்ருகளுக்கு மேல் கட்டிடங்கள் எழுப்புவது, அதனை பரக்கத்துக் காக வலம் வருவது.*

*நிச்சயமாக பித்அத்கள் இணைவைப்பின்பால் கொண்டு செல்லக் கூடியது. இவை அல்லாஹ்வுடைய மார்க்கத்தில் அல்லாஹ்வும் அவனு டைய தூதரும் காட்டித்தராத ஒன்றை செய்வதாகும். இதனைக் கொண்டு ஷைத்தான் மகிழ்ச்சி அடைகிறான். ஒரு அடியான் பாவம் செய்வதை விட பித்அத்கள் செய்வது ஷைத்தா னுக்கு மிகவும் விருப்பமானதாகும். ஷைத்தான் அறிவான் பாவம் செய்யக் கூடிய அடியான் அது பாவம் என்று*

*செய்து விட்டு பின்பு அல்லாஹ்விடம் மன்னிப்பு கேட்டுவிடுவான். ஆனால், பித்அத்வாதிகள் பித்அத்களை மார்க்கம் என்று செய்வார்கள். இது அல்லாஹ்வின் பக்கம் நெருங்கும் காரியம் என்று நினைத்துச் செய்வார்கள். பாவமன்னிப்பு தேடமாட்டார்கள். அதனால் அல்லாஹ் அவர்களை மன்னிப்பதும் இல்லை.*

**பித்அத்வாதிகளிடம் நடந்து கொள்ளும் முறை:**

*பித்அத்வாதிகளிடம் நாம் கடினமாக நடந்துகொள்ள வேண்டும். அவர்களுடைய வகுப்பறைகளில் கலந்து கொள்ளக் கூடாது. அவர்களுக்கு உபதேசம் செய்வதற்காக அவர்களை சந்திக்கலாம்.*

*இப்னு அப்பாஸ் (ரழி) கூறினார்கள், ''நீங்கள் பித்அத்வாதிகளின் சபைகளில் அமராதீர்கள், அது உங்களுடைய உள்ளங்களை நோயாக்கி விடும்''.*

*எனவே, பித்அத்களை விட்டு நாம் தூரமாக இருக்க வேண்டும். உலமாக்கள்மீது அதனைதடுப்பதும், பொதுமக்களுக்கு தெளிவுபடுத்துவதும், அதனை விட்டு அவர்களை காப்பதும் கடமையாகும்.*

*அல்லாஹ் தஆலா நம்மை அவனது மார்க்கத்தை சரியான முறையில் விளங்க வைப்பானாக. அதில் உறுதியாக்கி வைப்பானாக...!*

*ஆமீன்! யாரப்பல் ஆலமீன்..*